25-2

# ஸ்ரீ தேசிகப் பிரபந்தம்



(முதல் தொகுதி)




வெளியிடுவோர்
சாந்தி சாதனா
125, சேமியர்ஸ் சாலை
சென்னை – 600 028

215-2

## முன்னுரை

ஸ்ரீயப்பதியான ஸ்ரீமந் நாராயணன் தன் திருவருட் கடாக்ஷத்தாலே, அஞ்ஞானந்தகாரத்தில் தடுமாறுகிற சேதனர்களுக்குப் பெருவிளக்குப்போல் ஸ்வரூபோபாய புருஷார்த்தங்களை விளக்குகிற வேதசாஸ்திரங்களைப் பிரசாதித்து, அவற்றின் அர்த்தங்களைச் சந்தேக விபரீதங்கள் இல்லாமல் அறிவித்து அனுஷ்டான பர்யவஸிகளாக்கும் பொருட்டு மகானுபாவர்களான பக்த சிரேஷ்டரைக் கொண்டு காரியங்கொள்ள வேண்டுமென்று அவர்களை நியமித்து, அவர்களிடத்தில் அனுப்ரவேசித்து, அவர் முகத்தாலே ஸித்தாந்தத்தைப் பிரவர்த்திப்பித்துப், பின்னும் ஞானதிகர்களான ஆழ்வார்களை அவதரிப்பித்து, ஸகலோபஜிவ்யமான திரமிட பாஷையாலே சில ப்ரபந்தங்களைச் செய்தருள, பின்பு குமதிகளாலே க்ஷேபம் பிறக்க, அதை நிவர்த்திக்க வேண்டி, ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானர் ஸ்ரீமத் வேதாந்த தேசிகர் முதலாய ஆசார்யர்களையும் அவதரிப்பித்தான். அப்படிப்பட்ட ஆசார்யர்களுடைய ப்ரபாவங்கள் பரம போக்கியங்களாயும் பாவனங்களாயுமிருக்கையாலே அவற்ருல் சாஸ்திரங்களில் தெளிவுண்டாகிறது. அதனுலும் அவற்றைப் பாராட்டி அநுஸந்திப்பது ஸ்வரூபானு ரூபமாயும் கிருதஞ்ஜதா லக்ஷணமாயும் இருக்கையாலும் குருபரம்பரா பிரபாவம் சிறப்புப் பெற்றுள்ளது. குருபரம்பரா பிரபாவம் மணிப்பிரவாள நடையில் உள்ளது. முத்தும் பவளமும் மாறி மாறிக் கோத்த திருவாபாரணம் போல் இந்நடையும் பேரழகும் அர்த்த புஷ்டியும் பக்திப் பிரவாகமும் கொண்டு விளங்குகிறது.

இந்தக் குருபரம்பரா ப்ரபாவத்தை வைஷ்ணவர்களெல்லாம் பக்தியோடு நன்ருக ஸேவித்து அவ்வாசார்யர்களிடத்தில் மகா விசுவாஸமுடையவர்களாய் இருக்க வேண்டும். ஏனெனில் ஸ்ரீமந் நாராயணனே ஆழ்வார்களாகவும், ஆசார்யர்களாகவும் வந்து ஸம்ஸாரக் கடலில் அழுந்திக் கிடக்கிற ஆத்துமாக்களைச் சாஸ்திரமாகிற கையினுலே தூக்கியெடுத்துக் கடைதேற்றுகிருனென்றும், எம்பெருமானைப் போலே ஆசாரியனை உபாஸிக்க வேண்டுமென்றும் மந்திரத்திலும் அந்த மந்திரத்தின் தேவதையினிடத்திலும் மந்திரத்தைப் பிரஸாதித்த ஆசார்யனிடத்திலும் பக்தியை எப்போதும் செய்ய வேண்டுமென்றும் சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆகையால் ஆசார்யனிடத்தில் மகாவிசுவாஸாதிகளோடு இருக்கவேண்டும். அப்படியில்லாமலிருப்பவர்களுக்கு எந்த நிஷ்டையும் கை கூடுவதில்லை. உலகத்திலே ஒருவன் சோறு, கூறை முதலானவைகளைக் கொடுத்து ஆதரித்தால் அவனிடத்தில் எவ்வளவு நன்றிபாராட்ட வேண்டியுள்ளது! நன்றி பாராட்டாதவனை அனைவரும் நிந்திக்கின்றனர். நன்றி கொன்றவனுக்குக் கதியில்லை என்று திருக்குறளும், சாஸ்திரங்களும் விளக்குகின்றன. ஆகவே, ஆத்ம

விஷயத்தில் நித்யானந்தானுபவம் பண்ணும்படியான மஹோபகாரம் செய்த ஆசார்யனிடத்தில் நன்றியறிவும் பக்தி விசுவாஸமும் கொண்டிருக்க வேண்டும் என்பதைச் சொல்ல வேண்டுவதில்லை.

எனவே ஸ்ரீ வேதாந்த தேசிகர் என்ற ஆசார்யரின் பிரபாவமும், அவர் மூலமாகப் பகவான் அருளிச் செய்த தேசிகப்ரபந்தங்களும் பக்த சிரோமணிகளுக்குப் பெரிதும் பயன் படவேண்டும் என்ற நோக்கத்தில், தமிழிலக்கியப் பணி தொடர்ந்து நடைபெற மர்ரே கம்பெனி உரிமையாளரான அமரர் சாக்கை இராஜம் அவர்கள் நிறுவிய சாந்தி சாதனா வெளியிடுவதில் பெருமகிழ்ச்சியடைகிறது. இந்த பாகவத விஷய கைங்கர்யத்தில் பங்குகொண்டதன் மூலம் சாந்தி சாதனா ஆத்ம சந்தோஷம் கொள்கிறது.

ஸ்ரீ வேதாந்த தேசிகர் அருளிச் செய்த தமிழ்ப்பிரபந்தங்களுள் அமிருதரஞ்சனி, அதிகார சங்கிரகம், அமிருதா சுவாதினி, பரமபத சோபானம், பரமத பங்கம் , மெய்விரத மான்மியம் ஆறும் முதல் தொகுதியாகவும், மற்றவை இரண்டாம் தொகுதியாகவும் வெளியிடப் பெறுகின்றன.

இந்நூல் தற்போது அச்சாகுங்கால் பெரிதும் பங்குகொண்டு அச்சுகோத்து தந்த கமலா ஆர்ட்ஸ் அவர்களுக்கும், பிழை திருத்தம் முதலியன செய்த திரு.அ.சு.இராமமூர்த்தி, திரு.வை.பரமார்த்தலிங்கம், திருமதி.க.ஸ்ரீவித்யா மற்றும் திருமதி கமலா ஸ்ரீநிவாசன் ஆகியோருக்கும் சாந்தி சாதனாவின் நன்றி என்றென்றும் உரித்தாகும்.

25-2

உள்ளுறை

# ஸ்ரீ தேசிகப் பிரபந்தம்

ஸ்ரீ:

## 1. அமிருத ரஞ்சனி

சீர் ஒன்று தூப்புல் திருவேங் கடம் உடையான்
பார் ஒன்றச் சொன்ன பழமொழியுள்—ஓரொன்று
தானே அமையாதோ? தாரணியில் வாழ்வார்க்கு
வான் ஏறப் போமளவும் வாழ்வு. 1 – த

தம் பரம் என்று இரங்கித் தளரா மனம் தந்து அருளால்
உம்பர் தொழும் திருமால் உகந்தேற்கும் உபாயம் ஒன்றால்
நம் பிறவித் துயர் மாற்றிய ஞானப் பெருந் தகவோர்
சம்பிரதாயம் ஒன்றிச் சதிர்க்கும் நிலை சார்ந்தனமே. 1–1

கடல் அமுதத்தைக் கடைந்து சேர்த்த
திருமால் அடி காட்டிய, நம்—
தேசிகர்தம் நிலை பற்றிச் சேர்ந்தோமே. 1–2

முத்திக்கு அருள் சூட மூன்றைத் தெளி முன்னம்
இத் திக்கால் ஏற்கும் இதம். 1–3

மூன்றில் ஒரு மூன்றும் மூஇரண்டும் முந் நான்கும்
தோன்றத் தொலையும் துயர். 1–4

உயிரும் உடலும் உடலாக ஓங்கித்
தயிர் வெண்ணெய் தாரணியோடு உண்டான்—பயிரில்
களை போல் அசுரரைக் காய்ந்தான் தன்கையில்
வளை போல் எம் ஆசிரியர் வாக்கு. 1–5

அலை அற்ற ஆரமுதக் கடல் அக் கடலுண்ட முகில்
விலை அற்ற நன் மணி வெற்பு வெயில் நிலவு ஓங்கு பகல்
துலை உற்றன என்பர் தூ மறை சூடுந் துழாய் முடியாற்கு
இலை ஒத்தன அவன் பாதம் பணிந்தவர்க்கு எண்ணுதற்கே. 1–6

உத்தி திகழும் உரை மூன்றின் மும் மூன்றும்
சித்தம் உணரத் தெளிவித்தார்—முத்தி தரும்—
மூல மறையின் முடி சேர் முகில் வண்ணன்
சீலம் அறிவார் சிலர். 1–7

எனக்கு உரியன் எனது பரம் என் பேறு என்னுது
இவை அனைத்தும் இறை இல்லா இறைக்கு அடைத்தோம்,
தனக்கு இணை ஒன்று இல்லாத திருமால் பாதம்
சாதனமும் பயனும் எனச் சலங்கள் தீர்ந்தோம்,
உனக்கு இதம் என்று ஒரு பாகன் உரைத்தது உற்றோம்
உத்தமனும் அவன் உதவி எல்லாங் கண்டோம்,
இனிக்க வரும் அவை கவர இகந்தோம் சோகம்
இமையவரோடு ஒன்று இனி நாம் இருக்கும் நாளே. 1–8

தத்துவங்கள் எல்லாம் தகவால் அறிவித்து
முத்தி வழி தந்தார் மொய் கழலே–அத் திவத்தில்–
ஆர் அமுதம் ஆறு ஆம் இரு நிலத்தில் என்று உரைத்தார்
தாரம் முதல் ஓதுவித்தார் தாம். 1–9

திரு நாரணன் எனும் தெய்வமும் சித்தும் அசித்தும் என்று
பெரு நான் மறை முடி பேசிய தத்துவம் மூன்று இவை கேட்டு
ஒரு நாள் உணர்ந்தவர் உய்யும் வகை அன்றி ஒன்று உகவார்
இரு நாள் எழுத்தின் இதயங்கள் ஓதிய எண் குணரே. 1–10

காரணமாய் உயிராகி அனைத்தும் காக்கும்
கருணை முகில் கமலையுடன் இலங்குமாறும்
நாரணனார் வடிவான உயிர்கள் எல்லாம்
நாம் என்றும் நல் அடிமைக்கு ஏற்குமாறும்
தாரணி நீர் முதலான மாயை காலம்
தனி வான் என்று இவை உருவாம் தன்மைதானும்
கூர்அணி சீர் மதியுடைய குருக்கள் காட்டக்
குறிப்புடன் நாம் கண்ட வகை கூறினோமே. 1–11

அப்படி நின்ற அமலன் படி எல்லாம்
இப்படி எம் உள்ளத்து எழுதினார்–எப்படியும்
ஏர் ஆர் சுருதி ஒளியால் இருள் நீக்கும்
தாராபதி அனையார் தாம். 1–12

செம் பொன் கழல் இணைச் செய்யாள் அமரும் திரு அரங்கர்
அன்பர்க்கு அடியவராய் அடி சூடிய நாம் உரைத்தோம்
இன்பத் தொகை என எண்ணிய மூன்றில் எழுத்து அடைவே
ஐம்பத்தொரு பொருள் ஆர்உயிர் காக்கும் அமுது எனவே. 1–13

யான் அறியும் சுடராகி நின்றேன், மற்றும் யாதும் அலேன்,
வான் அமரும் திருமால்அடியேன், மற்றுஓர் பற்றும் இலேன்,
தான்அமுதானவன்தன் சரணே சரண், என்று, அடைந்தேன்,
மானம் இலா அடிமைப் பணி பூண்ட மனத்தினனே. 1–14

சீலம் கவர்ந்திடும் தேசிகர் தேசின் பெருமையினுல்
தூலங்கள் அன்ன துரிதங்கள் மாய்ந்தன, துஞ்சல் தரும்–
கோலம் கழிந்திடக் கூறிய காலம் குறித்து நின்றேம்,
மேல் இங்கு நாம் பிறவோம், வேலே வண்ணனே மேவுதுமே. 1–15

வண்மை உகந்த அருளால் வரம் தரும் மாதவஞர்
உண்மை உணர்ந்தவர் ஓதுவிக்கின்ற உரைவழியே
திண்மை தரும் தெளிவு ஒன்ருல் திணி இருள் நீங்கிய நாம்
தண்மை கழிந்தனம், தத்துவம் காணும் தரத்தினமே. 1–16

நாராயணன் பரன், நாம், அவனுக்கு நிலே அடியோம்,
சோராதுஅனேத்தும் அவன் உடம்புஎன்னும் சுருதிகளால்
சீர் ஆர் பெரும் தகைத் தேசிகர் எம்மைத் திருத்துதலால்
தீரா மயல் அகற்றும் திறம்பாத் தெளிவு உற்றனமே. 1–17

ஒன்றே புகல் என்று உணர்ந்தவர் காட்டத், திருவருளால்–
அன்றே அடைக்கலம் கொண்ட நம் அத்திகிரித் திருமால்
இன்றே இசையின்இணே அடி சேர்ப்பர், இனிப் பிறவோம்,
நன்றே வருவது, எல்லாம், நமக்குப் பரம்ஒன்று இலதே. 1–18

சிறு பயனில் படியாத தகவோர் எம்மைச்
சேர்க்க அடைக்கலம் கொண்ட திருமால், தானே
மறு பிறவி அறுத்து அழியா வானில் வைக்கும்,
மனமே! நீ மகிழாதே இருப்பது என்கொல்,
உறுவது உனக்கு உரைக்கேன், இங்கு இருக்கும் காலம்
ஒரு பிழையும் புகுதாத ஊணர்த்தி வேண்டிப்
பெறுவது எலாம் இங்கே நாம் பெற்று வாழப்
பேரடிமையால்ஏது என்று இகழேல், நீயே. 1–19

சாக்கியர் சைனர்கள் சார்வாகர் சாங்கியர் சைவர் மற்றுந்
தாக்கியர் நூல்கள் சிதையத் தனி மறையின் கருத்தை
வாக்கியம் முப்பதினுல் வகைசெய்து வியாகரித்தோம்
தேக்கி மனத்துள் இதனைத் திணி இருள் நீங்குமினே. 1–20

தள்ளத் துணியினும் தாய்போல் இரங்கும் தனித் தகவால்
உள்ளத்து உறைகின்ற உத்தமன் தன்மை உணர்ந்து உரைத்தோம்,
முள் ஒத்த வாதியர் முன்னே வரின் எங்கள் முக்கியர்பால்
வெள்ளத்திடையில் நரி போல் விழிக்கின்ற வீணர்களே. 1–21

செய்யேல் மறம்என்று தேசிகன் தாதையவன் உரைத்த
மெய்யே அரும் பொருள் சூடிய வெண் மதி காதலியாம்
பொய்யே பகை புலன் ஐயிரண்டொன்று பொருங் கருவி
கை ஏறு சக்கரக் காவலன் காவல் அடைந்தவர்க்கே. 1–22

அந்தம் இல் ஆதிதேவன்அழிசெய்து அடைத்த
அலை வேலை ஓதம் அடையச்
செந் தமிழ் நூல் வகுத்த சிறு மா மனிச்சர்
சிறு கைச் சிருங்கையதுபோல்
சந்தம் எலாம்உரைப்ப இவை என்று தங்கள்–
இதயத்து அடக்கி, அடியோம்–
பந்தம் எலாம் அறுக்க அருள் தந்து உகந்து
பரவும் பொருள்கள் இவையே. 1–23

முக் குண மாயையின் மூவெட்டின்கீழ் வரும் மூவகையும்
இக் குணம் இன்றி இலங்கிய காலச் சுழி இனமும்
நற் குணம் ஒன்றுடை நாகமும் நாராயணன்உடம்பாய்ச்
சிற்குணம் அற்றவை யென்று உரைத்தார் எங்கள் தேசிகரே. 1–24

எனது என்பதும் (இ)யான்என்பதும்இன்றித்
தனது என்று தன்னையும் காணாது–உனதுஎன்று
மா தவத்தால் மாதவற்கே வன் பரமாய் மாய்ப்பதனில்
கைதவத்தான் கைவளரான் காண். 1–25

பல் வினை வன் கயிற்றால் பந்தமுற்று உழல்கின்றனரும்
நல் வினை மூட்டிய நாரணனர் பதம் பெற்றவரும்
தொல் வினை என்றும்இல்லாச் சோதி வானவரும், சுருதி
செல் வினை ஓர்ந்தவர் சீவர் என்று ஓதச் சிறந்தனமே. 1–26

ஆரணங்கள் எல்லாம் அடி சூட மேல் நின்ற
காரணமாய் ஒன்றால் கலங்காதான்–நாரணனே
நம் மேல் வினை கடியும் நல் வழியில் தான் நின்று
தன் மேனி தந்தருளும் தான். 1–27

குடல்மிசை ஒன்றியும் கூடியும் நின்ற கொடுந் துயரும்
உடல்மிசைத் தோன்றும் உயிரும் உயிர்க்கு உயிராம் இறையும்
கடல்மிசைக் கண்ட தரளத் திரள் அவை கோத்த பொன் நூல்
மடல்மிசை வார்த்தை அதன் பொருள் என்ன வகுத்தனமே. 1–28

தத்துவந்தன்னில் விரித்திடத் தோன்றும் இரண்டுதனில்
பத்தி விலக்கிய பாசண்டர் வீசுறும் பாசம் உரூர்
எத் திசையும் தொழுது ஏத்திய கீர்த்தியர், எண் திசையார்
சுத்தர் உரைத்த சுளகம் அருந்திய தூயவரே. 1–29

வினைத் திரள் மாற்றிய வேதியர் தந்த நல் வாசகத்தால்
அனைத்தும் அறிந்தபின் ஆறும் பயனும் என அடைந்தோம்,
மனத்தில்இருந்து மருத்து அமுதாகிய மாதவனூர்
நினைத்தல் மறத்தல் அரிதாய நல் நிழல் நீள் கழலே. 1–30

ஓதும் மறை நான்கதனில் ஓங்கும் ஒரு மூன்றினுள்ளே
நீதி நெறி வழுவாநிற்கின்றோம்–போது அமரும்
பேராயிரமும் திருவும் பிரியாத
நாராயணன் அருளால் நாம். 1–31

ஊன் தந்து, நிலை நின்ற உயிரும் தந்து, ஓர்–
உயிராகிய உள் ஒளியோடு உறைந்த நாதன்
தான்தந்த இன்னுயிரை எனது என்னமல்
நல் அறிவும் தந்து, அகலா நலமும் தந்து,
தான் தந்த நல் வழியால் தாழ்ந்த என்னைத்
தன் தனக்கே பரமாகத் தானே எண்ணி
வான் தந்து, மலர் அடியும் தந்து, வானோர்
வாழ்ச்சி தர மன் அருளால் வரித்திட்டானே. 1–32

திருமால் அடி இணையே திண் சரணக் கொண்டு
திருமால் அடி இணையே சேர்வார் – ஒரு மால் –
அருளால் அருளாத வானோர்கள் வாழ்ச்சி
அருளால் நமக்கு அளித்தார் ஆய்ந்து. 1–33

சேர்க்கும் திருமகள் சேர்த்தியில் மன்னுதல் சீர்ப் பெரியோற்கு
ஏற்கும் குணங்கள் இலக்காம் வடிவில் இணையடிகள்
பார்க்கும் சரண் அத்தில் பற்றுதல் நம் நிலை நாம் பெறும் பேறு
ஏற்கின்ற எல்லைகள் எல்லாம் களை அற எண்ணினமே. 1–34

திருமால் அடி இணை சேர்ந்து திகழ்ந்த அடிமை பெறத்
திரு நாரணன் சரண் திண் சரணுகத் துணிந்து அடைவோர்
ஒரு நாள்உரைக்க உயிர் தரும் மந்திரம் ஓதிய நாம்
வரு நாள் பழுது அற்று வாழும் வகையதில் மன்னுவமே. 1–35

மற்று ஒரு பற்று இன்றி வந்தடைந்தார்க்கு எல்லாம்
குற்றம் அறியாத கோவலனுர் – முற்றும் –
வினை விடுத்து விண்ணவரோடு ஒன்ற விரைகின்றுர்;
நினைவுடைத்தாய் நீ மனமே நில்லு. 1–36

எல்லாத் தருமமும் என்னை இகழ்ந்திடத் தான் இகழாது
எல்லாம் தனது என எல்லாம் உகந்து அருள் தந்த பிரான்
மல் ஆர் மதக் களிறு ஒத்த வினைத் திரள் மாய்ப்பன் என்ற–
சொல்லால் இனி ஒரு கால் சோகியாத் துணிவு உற்றனமே. 1–37

வினைத் திரள் மாற்றிய வேதியர் தந்தருள் வாசகத்தால்
அனைத்தும் அறிந்தபின் ஆறும் பயனும் என அடைந்தோம்,
மனத்தில்இருந்து மருத்து அமுதாகிய மாதவனுர்
நினைத்தல் மறத்தல் அரிதாகி நின்றன நீள் கழலே. 1–38

எட்டில் ஆறிரண்டில் ஒன்றில் எங்கும் ஆறு இயம்புவார்
விட்ட ஆறு பற்றும் ஆறு வீடு கண்டு மேவுவார்
சிட்டரான தேசு உயர்ந்த தேசிகர்க்கு உயர்ந்து மேல்
எட்டும் மூன்றும் ஊடு அறுத்தது எந்தை மால் இரக்கமே. 1–39

## 2. அதிகாரசங்கிரகம்

பொய்கைமுனி பூதத்தார் பேயாழ்வார் தண்–
　　பொருநல் வரும் குருகேசன் விட்டு சித்தன்
துய்ய குலசேகரன் நம் பாண நாதன்
　　தொண்டரடிப்பொடி மழிசை வந்த சோதி
வையம் எலாம் மறை விளங்க வாள் வேல் ஏந்தும்
　　மங்கையர்கோன் என்று இவர்கள் மகிழ்ந்து பாடும்
செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய ஓதித்
　　தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றேமே. 2–1

இன்பத்தில் இறைஞ்சுதலில் இசையும் பேற்றில்
　　இகழாத பல் உறவில் இராகம் மாற்றில்

தன் பற்றில் வினை விலக்கில் தகவு ஒக்கத்தில்
தத்துவத்தை உணர்த்துதலில் தன்மை ஆக்கில்
அன்பர்க்கே அவதரிக்கும் ஆயன் நிற்க
அரு மறைகள் தமிழ்செய்தான் தாளே கொண்டு
துன்பு அற்ற மதுரகவி தோன்றக் காட்டும்
தொல் வழியே நல் வழிகள் துணிவார்கட்கே. 2–2

என் உயிர் தந்து அளித்தவரைச் சரணம் புக்கு
யான் அடைவே அவர் குருக்கள் நிரை வணங்கிப்
பின் அருளால் பெரும் பூ தூர் வந்த வள்ளல்,
பெரிய நம்பி ஆளவந்தார் மணக்கால் நம்பி,
நல் நெறியை அவர்க்கு உரைத்த உய்யக்கொண்டார்
நாதமுனி சடகோபன் சேனைநாதன்
இன் அமுதத் திருமகள் என்று இவரை முன்னிட்டு
எம்பெருமான் திருவடிகள் அடைகின்றேனே. 2–3

ஆரண நூல் வழிச் செவ்வை அழித்திடும் ஐ துகர்க்கு, ஓர்–
வாரணமாய் அவர் வாதக் கதலிகள் மாய்த்த பிரான்
ஏர் அணி கீர்த்தி இராமானுச முனி இன் உரை சேர்
சீரணி சிந்தையினோம், சிந்தியோம் இனித் தீவினையே. 2–4

நீள வந்து இன்று விதி வகையால் நினைவு ஒன்றிய நாம்
மீள வந்து இன்னும் வினை உடம்பு ஒன்றி விழுந்து உழலாது
ஆள வந்தார் என வென்று அருள் தந்து விளங்கிய சீர்
ஆளவந்தார் அடியோம், படியோம் இனி அல் வழக்கே. 2–5

காளம் வலம்புரி அன்ன நல் காதல் அடியவர்க்குத்
தாளம் வழங்கித் தமிழ் மறை இன் இசை தந்த வள்ளல்
மூளும் தவ நெறி மூட்டிய நாதமுனி கழலே
நாளும் தொழுது எழுவோம், நமக்கு ஆர் நிகர் நானிலத்தே. 2–6

ஆளும் அடைக்கலம் என்று அமை அம்புயத்தாள் கணவன்–
தாள் இணை சேர்த்து, எமக்கும் அவை தந்த தகவு உடையார்
மூளும் இருட்கள் விள முயன்று ஓதிய மூன்றின் உள்ளம்
நாளும் உகக்க இங்கே நமக்கு ஓர் விதி வாய்க்கின்றதே. 2–7

அந்தாதித்தொடை

திருவுடன் வந்த செழு மணிபோல் திருமால் இதயம்
மருவு இடம் என்ன, மலர் அடி சூடும் வகை பெறும் நாம்
கருவுடன் வந்த கடு வினை ஆற்றில் விழுந்து ஒழுகாது
அருவுடன் ஐந்து அறிவார் அருள் செய்ய அமைந்தனரே. 2–8

அமையா இவை எனும் ஆசையினால் அறு மூன்று உலகில்
சுமையான கல்விகள் சூழ வந்தாலும் தொகை இவை என்று
இமையா இமையவர் ஏத்திய எட்டிரண்டு எண்ணிய, நம்–
சமயாசிரியர் சதிர்க்கும் தனி நிலை தந்தனரே. 2–9

நிலை தந்த தாரகனாய் நியமிக்கும் இறைவனுமாய்
இலது ஒன்று என வகை எல்லாம் தனது எனும் எந்தையுமாய்த்
துலை ஒன்று இலை என நின்ற துழாய் முடியான் உடம்பாய்
விலை இன்றி நாம் அடியோம் எனும் வேதியர் மெய்ப் பொருளே. 2–10

பொருள் ஒன்று என நின்ற பூமகள் நாதன் அவனடி சேர்ந்து–
அருள் ஒன்றும் அன்பன் அவன் கொள் உபாயம் அமைந்த பயன்
மருள் ஒன்றிய வினை வல் விலங்கு என்று இவை ஐந்து அறிவார்
இருள் ஒன்றிலா வகை எம் மனம் தேற இயம்பினரே. 2–11

தேற இயம்பினர் சித்தும் அசித்தும் இறையும் என
வேறுபடும் வியன் தத்துவம் மூன்றும், வினை உடம்பில்–
கூறுபடும் கொடு மோகமும் தான் இறை ஆம் குறிப்பும்
மாற நினைந்து அருளால் மறை நூல் தந்த வாதியரே. 2–12

வாதியர் மன்னும் தருக்கச் செருக்கின் மறை குலையச்
சாது சனங்கள் அடங்க நடுங்கத் தனித்தனியே
ஆதி எனவகை ஆரண தேசிகர் சாற்றினர், நம்–
போது அமரும் திருமாதுடன் நின்ற புராணனையே. 2–13

நின்ற புராணன் அடி இணை ஏந்தும் நெடும் பயனும்
பொன்றுதலே நிலை என்றிடப் பொங்கும் பவக் கடலும்
நன்று இது தீயது இது என்று நவின்றனர் நல் அருளால்
வென்று புலன்களை வீடினை வேண்டும் பெரும் பயனே. 2–14

வேண்டும் பெரும் பயன் வீடு என்று அறிந்து விதி வகையால்
நீண்டும் குறுகியும் நிற்கும் நிலைகளுக்கு ஏற்கும் அன்பர்
மூண்டு ஒன்றில் மூல வினை மாற்றுதலில் முகுந்தன் அடி
பூண்டன்றி, மற்றுஓர் புகல் ஒன்று இலை என நின்றனரே. 2–15

நின்ற நிலைக்கு உற நிற்குங் கருமமும் நேர் மதியால்
நன்று என நாடிய ஞானமும் நல்கும் உள் கண்ணுடையார்
ஒன்றிய பத்தியும் ஒன்றும் இலா விரைவார்க்கு, அருளால்
அன்று பயன் தருமாறும் அறிந்தவர் அந்தணரே. 2–16

அந்தணர் அந்தியர் எல்லையில் நின்ற அனைத்து உலகும்
நொந்தவரே முதலாக நுடங்கி அனன்னியராய்
வந்து அடையும் வகை வன் தகவு ஏந்தி வருந்திய, நம்–
அந்தம் இல் ஆதியை அன்பர் அறிந்து அறிவித்தனரே. 2–17

அறிவித்தனர் அன்பர் ஐயம் பறையும் உபாயம் இல்லாத்
துறவித் துனியில் துணையாம் பரனை வரிக்கும் வகை
உறவு இத்தனை இன்றி ஒத்தார் என நின்ற உம்பரை நாம்
பிறவித் துயர் செகுப்பீர் என்று இரக்கும் பிழை அறவே. 2–18

அறவே பரம் என்று அடைக்கலம் வைத்தனர், அன்று நம்மைப்–
பெறவே கருதிப் பெருந்தகவு உற்ற பிரான் அடிக்கீழ்
உறவே இவன் உயிர் காக்கின்ற ஓர் உயிர் உண்மையை, நீ–
மறவேல் என நம் மறை முடி சூடிய மன்னவரே. 2–19

மன்னவர் விண்ணவர் வானோர் இறை ஒன்றும் வான் கருத்தோர்
அன்னவர் வேள்வி அனைத்தும் முடித்தனர், அன்புடையார்க்கு
என்ன வரம் தர என்ற நம் அத்தி கிரித் திருமால்
முன்னம் வருந்தி அடைக்கலம் கொண்ட நம் முக்கியரே. 2–20

முக்கிய மந்திரம் காட்டிய மூன்றில் நிலையுடையார்
தக்கவை அன்றித் தகாதவை ஒன்றும் தமக்கு இசையார்
இக் கருமங்கள் எமக்குஉள என்னும் இலக்கணத்தால்
மிக்க உணர்த்தியர் மேதினி மேவிய விண்ணவரே. 2–21

விண்ணவர் வேண்டி விலக்கின்றி மேவும் அடிமை எலாம்
மண்ணுலகத்தில் மகிழ்ந்து அடைகின்றனர், வண் துவரைக்

கண்ணன் அடைக்கலம் கொள்ளக் கடன்கள் கழற்றிய, நம்
பண் அமரும் தமிழ் வேதம் அறிந்த பகவர்களே. 2–22

வேதம் அறிந்த பகவர் வியக்க விளங்கிய சீர்
நாதன் வகுத்த வகை பெறும் நாம் அவன் நல் அடியார்க்கு
ஆதரம் மிக்க அடிமை இசைந்து அழியா மறை நூல்
நீதி நிறுத்த நிலே குலேயா வகை நின்றனமே. 2–23

நின்றனம், அன்புடை வானேர் நிலேயில், நிலம் அளந்தான்
நன்று இது தீயது இது என்று நடத்திய நான் மறையால்
இன்று நமக்கு இரவு ஆதலின் இம் மதியின் நிலவே–
அன்றி, அடிக்கடி ஆர் இருள் தீர்க்க அடியுளதே. 2–24

உளது ஆன வல் வினேக்கு உள்ளம் வெருவி உலகு அளந்த
வளர் தாமரை இணே வன் சரண்ஆக வரித்தவர்தாம்
களேதான் என எழும் கன்மம் துறப்பர், துறந்திடிலும்
இளேதா நிலே செக எங்கள் பிரான் அருள் தேன் எழுமே. 2–25

தேன் ஆர் கமலத் திருமகள் நாதன் திகழ்ந்து உறையும்
வான் நாடு உகந்தவர் வையத்து இருப்பிடம், வன் தருமக்
கான் ஆர் இமயமும் கங்கையும் காவிரியும் கடலும்
நானு நகரமும் நாகமும் கூடிய நல் நிலமே. 2–26

நல் நிலமாமது நற் பகலாமது நல் நிமித்தம்
என்னலுமாமது யாதானுமாம், அங்கு அடியவர்க்கு
மின் நிலே மேனி விடும் பயணத்து, விலக்கு இலது ஓர்
நல் நிலேயாம் நடு நாடி வழிக்கு நடைபெறவே. 2–27

நடைபெற அங்கி பகல் ஒளி நாள் உத்தராயணம் ஆண்டு
இடை வரு காற்று இரவி இரவின் பதி மின் வருணன்
குடையுடை வானவர் கோன் பிரசாபதி யென்று இவரால்
இடையிடை போகங்கள் எய்தி எழில் பதம் ஏறுவரே. 2–28

ஏறி எழில் பதம் எல்லா உயிர்க்கும் இதம் உகக்கும்
நாறு துழாய் முடி நாதனே நண்ணி, அடிமையில் நம்
கூறு கவர்ந்த குருக்கள் குழாங்கள் குரை கழற்கீழ்
மாறுதல் இன்றி மகிழ்ந்து எழும் போகத்து மன்னுவமே. 2–29

மன்னும் அனைத்து உறவாய் மருள் மாற்று அருள் ஆழியுமாய்த்
தன் நினைவால் அனைத்தும் தரித்து ஓங்கும் தனி இறையாய்
இன் அமுதத்து அமுதால் இரங்கும் திரு நாரணனே
மன்னிய வன் சரண் மற்று ஓர் பற்று இன்றி வரிப்பவர்க்கே. 2–30

வரிக்கின்றனன் பரன் யாவரை என்று மறை அதனின்
விரிக்கின்றதும் குறி ஒன்றால் வினையரை ஆதலின் நாம்
உரைக்கின்ற நல் நெறி ஓரும் படிகளில் ஓர்ந்து உலகம்
தரிக்கின்ற தாரகனார் தகவால் தரிக்கின்றனமே. 2–31

தகவால் தரிக்கின்ற தன் அடியார்களைத் தன் திறத்தில்
மிக ஆதரம்செயும் மெய் அருள் வித்தகன் மெய் உரையின்
அகவாய் அறிந்தவர் ஆரண நீதி நெறி குலைதல்
உகவாரென, எங்கள் தேசிகர் உண்மை உரைத்தனரே. 2–32

உண்மை உரைக்கும் மறைகளில் ஓங்கிய உத்தமனார்
வண்மை அளப்பு அரிது ஆதலின் வந்து கழல் பணிவார்
தண்மை கிடக்கத் தரம் அளவு என்ற இயல்பு இலதாம்
உண்மை உரைத்தனர் ஓரம் தவிர உயர்ந்தனரே. 2–33

உயர்ந்தனன் காவலன் நல்லார்க்கு உரிமை துறந்து உயிராய்
மயர்ந்தமை தீர்ந்து மற்று ஓர் வழி இன்றி அடைக்கலமாய்ப்
பயந்தவன் நாரணன் பாதங்கள் சேர்ந்து, பழ அடியார்–
நயந்த குற்றவேல் எல்லாம் நாடும் நல் மனு ஓதினமே. 2–34

ஓதும் இரண்டை இசைத்து அருளால் உதவும் திருமால்
பாதம் இரண்டும் சரண் எனப் பற்றி, நம் பங்கயத்தாள்
நாதனை நண்ணி நலம் திகழ் நாட்டில் அடிமை எலாம்
கோது இல் உணர்த்தியுடன் கொள்ளுமாறு குறித்தனமே. 2–35

குறிப்புடன் மேவும் தருமங்கள் இன்றி, அக் கோவலனார்–
வெறித் துளவக் கழல் மெய் அரண் என்று விரைந்து அடைந்து
பிரித்த வினைத் திரள் பின் தொடரா வகை அப்பெரியோர்–
மறிப்புடை மன் அருள் வாசகத்தால் மருள் அற்றனமே. 2–36

மருள் அற்ற தேசிகர் வான் உகப்பால் இந்த வையம் எலாம்
இருள் அற்று இறைவன் இணை அடி பூண்டு உய எண்ணுதலால்

தெருள் உற்ற செந் தொழில் செல்வம் பெருகிச் சிறந்தவர்பால்
அருள் உற்ற சிந்தையினால் அழியா விளக்கு ஏற்றினரே. 2–37

ஏற்றி மனத்து எழில் ஞான விளக்கை இருள் அனைத்தும்
மாற்றினவர்க்கு, ஒரு கைம்மாறு மாயனும் காணகில்லான்
போற்றி உகப்பதும் புந்தியில் கொள்வதும் பொங்கு புகழ்
சாற்றி வளர்ப்பதும் சற்று அல்லவோ முன்னம் பெற்றதற்கே. 2–38

முன் பெற்ற ஞானமும் மோகம் துறக்கலும், மூன்று உரையில்–
தன் பற்று அது அமையும் தாழ்ந்தவர்க்கு ஈயும் தனித் தகவும்,
மன் பற்றி நின்ற வகை உரைக்கின்ற மறையவர்பால்,
சின் பற்றி என் பயன், சீர் அறிவோர்க்கு இவை செப்பினமே. 2–39

செப்ப செவிக்கு அமுது என்னத் திகழும் செழுங் குணத்துத்
தப்பு அற்றவர்க்குத் தாமே உகந்து தரும் தகவால்
ஒப்பு அற்ற நான் மறை உள்ளக் கருத்தில் உறைத்து உரைத்த
முப்பத்திரண்டு இவை முத் தமிழ் சேர்ந்த மொழித் திருவே. 2–40

புருடன் மணி வரமாகப், பொன்று மூலப்
பிரகிருதி மறுவாக, மான் தண்டு ஆகத்
தெருள் மருள் வாள் உறையாக, ஆங்காரங்கள்–
சார்ங்கம் சங்காக, மனம் திகிரியாக,
இருடிகங்கள் ஈரைந்தும் சரங்களாக,
இரு பூத மாலை வன மாலையாகக்,
கருடன் உருவம் மறையின் பொருளாம் கண்ணன்
கரிகிரி மேல் நின்று அனைத்தும் காக்கின்றானே. 2–41

ஆராத அருள் அமுதம் பொதிந்த கோயில்,
அம்புயத்தோன் அயோத்தி மன்னற்கு அளித்த கோயில்,
தோலாத தனி வீரன் தொழுத கோயில்,
துணையான வீடணற்குத் துணையாம் கோயில்,
சேராத பயன் எல்லாம் சேர்க்கும் கோயில்,
செழுமறையின் முதல் எழுத்துச் சேர்ந்த கோயில்,
தீராத வினை அனைத்தும் தீர்க்கும் கோயில்,
திருவரங்கம் எனத் திகழும் கோயில் தானே. 2–42

கண்ணன் அடி இணை நமக்குக் காட்டும் வெற்பு,
கடு வினையர் இரு வினையும் கடியும் வெற்பு,

திண்ணம் இது வீடு என்னத் திகழும் வெற்பு,
தெளிந்த பெருந் தீர்த்தங்கள் செறிந்த வெற்பு,
புண்ணியத்தின் புகல் இது எனப் புகழும் வெற்பு,
பொன் உலகின் போகம் எல்லாம் புணர்க்கும் வெற்பு,
விண்ணவரும் மண்ணவரும் விரும்பும் வெற்பு,
வேங்கட வெற்பு என விளங்கும் வேத வெற்பே. 2-43

உத்தம அமர்த் தலம் அமைத்து, ஓர் எழில் தனுவின் உய்த்த கணையால்
அத்திர அரக்கன் முடி பத்தும் ஒரு கொத்தென உதிர்த்த திறலோன்,
மத்துறு மிகுத்த தயிர் மொய்த்த வெணெய் வைத்தது உணும் அத்தன் இடமாம்
அத்தி கிரி பத்தர் வினை தொத்து அற அறுக்கும் அணி அத்தி கிரியே. 2-44

எட்டு மா மூர்த்தி என் கணன் எண்திக்கு எட்டு இறை எண் பிரகிருதி
எட்டு மா வரைகள் ஈன்ற எண் குணத்தோன் எட்டு எனும் எண் குண
மதியோர்க்கு
எட்டு மா மலர் எண் சித்தி எண் பத்தி எட்டு யோகாங்கம் எண் செல்வம்
எட்டு மா குணம் எட்டெட்டு எனும் கலை எட்டும் இரதமேலதுவும்
எட்டினவே. 2-45

ஒண் தொடியாள் திருமகளும் தானும் ஆகி
ஒரு நினைவால் ஈன்ற உயிர் எல்லாம் உய்ய
வண் துவரை நகர் வாழ வசு தேவற்காய்
மன்னவற்குத் தேர்ப் பாகன் ஆகி நின்ற
தண் துளவ மலர் மார்பன் தானே சொன்ன
தனித் தருமம் தான் எமக்காய்த் தன்னை என்றும்-
கண்டு களித்து அடி சூட விலக்காய் நின்ற
கண் புதையல் விளையாட்டைக் கழிக்கின்றனே. 2-46

மூண்டாலும் அரியதனின் முயல வேண்டா,
முன்னமதில் ஆசை தனை விடுகை திண்மை,
வேண்டாது, சரண நெறி, வேறு ஓர் கூட்டு,
வேண்டில் அயன் அத்திரம் போல் வெள்கி நிற்கும்
நீண்டாகும் நிறை மதியோர் நெறியிற் கூடா
நின் தனிமை துணையாக என்றன் பாதம்-
பூண்டால், உன் பிழைகள் எலாம் பொறுப்பன் என்ற
புண்ணியனர் புகழ் அனைத்தும் புகழுவோமே. 2-47

சாதனமும் நற்பயனும் நானே ஆவன்,
சாதகனும் என் வயமாய் என்னைப் பற்றும்,
சாதனமும் சரண நெறி அன்று உனக்குச்
சாதனங்கள் இந் நிலைக்கு ஓர் இடையின் நில்லா
வேதனை சேர் வேறு அங்கம் இதனில் வேண்டா;
வேறு எல்லாம் நிற்கும் நிலை நானே நிற்பன்;
தூதனும் ஆம் நாதனும் ஆம் என்னைப்பற்றிச்
சோகம் தீர், என உரைத்தான் சூழ்கின்றானே. 2–48

தன் நினைவில் விலக்கு இன்றித் தன்னை நண்ணா–
நினைவு அனைத்தும் தான் விளைத்தும் விலக்கும் நாதன்
எம் நினைவை இப்பவத்திலின்று மாற்றி
இணை அடிக்கீழ் அடைக்கலம் என்று எம்மை வைத்து
முன் நினைவால் யாம் முயன்ற வினையால் வந்த
முனிவு அயர்ந்து முத்தி தர முன்னே தோன்றி
நல் நினைவால் நாம் இசையும் காலம் இன்றோ–
நாளையோ என்று நகை செய்கின்றானே. 2–49

பாட்டுக்கு உரிய பழையவர் மூவரைப் பண்டு ஒருகால்
மாட்டுக்கு அருள் தரும் மாயன் மலிந்து வருந்துதலால்
நாட்டுக்கு இருள் செக நான் மறை அந்தி நடை விலங்க
வீட்டுக்கு இடைகழிக்கே வெளி காட்டும் அம் மெய் விளக்கே. 2–50

உறு சகடம் உடைய ஒரு கால் உற்று உணர்ந்தன;
உடன் மருதம் ஒடிய ஒரு போதில் தவிழ்ந்தன;
உறி தடவும் அளவில் உரலோடு உற்று நின்றன;
உரு நெறி ஓர் தருமன் விடு தூதுக்கு உகந்தன;

மற நெறியர் முறிய பிருதானத்து வந்தன;
மலர்மகள் கை வருட மலர் போதிற் சிவந்தன;
மறு பிறவி அறு முனிவர் மாலுக்கு இசைந்தன;
மனு முறையில் வருவது ஓர் விமானத்து உறைந்தன;

அறமுடைய விசயன் அமர் தேரில் திகழ்ந்தன;
அடல் உரக படம் மடிய ஆடிக் கடிந்தன;
அறு சமயம் அறிவு அரிய தானத்து அமர்ந்தன;
அணி குருகை நகர் முனிவர் நாவுக்கு அமைந்தன;

வெறியுடைய துளவ மலர் வீறுக்கு அணிந்தன;
விழு கரி ஓர் குமரன் என மேவிச் சிறந்தன;
விறல் அசுரர் படை அடைய வீயத் துரந்தன;
விடல் அரிய பெரிய பெருமாள் மென் பதங்களே. 2–51

மறை உரைக்கும் பொருள் எல்லாம் மெய் என்று ஓர்வார்
மன்னிய கூர் மதியுடையார், வண் குணத்தில்
குறை உரைக்க நினைவு இல்லார் குருக்கள் தம்பால்
கோது அற்ற மனம் பெற்றால் கொள்வார் நன்மை
சிறை வளர்க்கும் சில மாந்தர் சந்தேகத்தால்
சிதையாத திண் மதியோர் தெரிந்தது ஓரார்
பொறை நிலத்தில் மிகும் புனிதர் காட்டும் எங்கள் –
பொன்றாத நல் நெறியில் புகுதுவாரே. 2–52

இது வழி இன் அமுது என்றவர் இன் புலன் வேறிடுவார்
இது வழியாம்அல என்று அறிவார் எங்கள் தேசிகரே,
இது வழி எய்துக என்று உகப்பால் எம்பிழை பொறுப்பார்
இது வழியா மறையோர் அருளால் யாம் இசைந்தனமே. 2–53

எட்டும் இரண்டும் அறியாத எம்மை இவை அறிவித்து
எட்ட ஒண்ணாத இடம் தரும் எங்கள் அம் மாதவனார்
முட்ட வினைத் திரள் மாள முயன்றிடும் 'அஞ்சல்' என்றார்,
சுட்டு எழில் வாசகத்தால் கலங்கா நிலை பெற்றனமே. 2–54

வானுள் அமர்ந்தவருக்கும் வருந்த வரு நிலைகள்
தான் உளனாய் உகக்கும் தரம் இங்கு நமக்குளதே
கூன் உள நெஞ்சுகளால் குற்றம் எண்ணி இகழ்ந்திடினும்
தேன் உள பாத மலர்த் திருமாலுக்குத் தித்திக்குமே. 2–55

வெள்ளைப் பரி முகர் தேசிகராய் விரகால், அடியோம்
உள்ளத்து எழுதியது ஓலையில் இட்டனம், யாம்; இதற்குஎன்
கொள்ளத் துணியினும் கோதுஎன்று இகழினும் கூர்மதியீர்!
எள் அத்தனை உகவாது, இகழாது எம் எழில் மதியே. 2–56

## 3. அமிருதாசுவாதினி

மூலம் கிளை என ஒன்று இரண்டான மொழி இரண்டும்
மேல் ஒன்று இலையென நின்ற அவ் வித்தகன் தன் உரையும்
காலம் கழிவதன் முன்னம் கருத்துறக் கண்டிடவே
ஞாலம் புகழும் நம் தேசிகர் தாம் நமை வைத்தனரே. 3–1

காரணமும் காவலனும் ஆகி என்றும்
கமலையுடன் பிரியாத நாதனான
நாரணனுக்கு அடியேன் நான் அடிமை பூண்ட
நல் அடியார்க்கு அல்லால் மற்றொருவர்க்கு அல்லேன்!
ஆரணங்கள் கொண்டு அகமும் புறமும் கண்டால்
அறிவு ஆகி அறிவதும் ஆய் அறு நான்கு அன்றிச்
சீர் அணிந்த சுடர் போலத் திகழ்ந்து நின்றேன்,
சிலை விசையன் தேர் அனைய சிறு வேதத்தே. 3–2

யான் எனது என்பது ஒன்று இல்லை; என் செய்தவனை அல்லால்
ஆனது அறிந்திடும் தன் அடியார்க்கு எனை ஆள்படுத்தித்
தான் எனை நல்கி நடத்துகின்றான், தன் அருள் வழியே;
நான் உனை வீடு செய்வேன் என்ற நம் திரு நாரணனே. 3–3

யாது ஆம் இவை அனைத்தும் படைத்து ஏந்தும் இறைவனுமாய்க்
கோது ஆம் குணங்களுடன் குறுகாத குணத்தனுமாய்
மாதா பிதா என மன் உறவாய்க் கதி என்ன நின்றான்;
போது ஆர் திருவுடன் பொன் அருள் பூத்த நம் புண்ணியனே. 3–4

இரு விலங்கு கழித்து, இடராம் உடலம் தன்னில்
இலங்கு நடு நாடியினால் எம்மை வாங்கி,
ஒரு விலங்கு நெறி அல்லா வழியால் மன்னும்
உயர் வானில் ஏற்றி, உயிர் நிலையும் தந்து,
பெரு விலங்காம் அருள் தன்னால் தன் அடிக்கீழ்
பிரியாத அமரருடன் பிணைத்துத் தன் ஆர் –
உருவில் அங்கும் இசைவிக்கும், உம்பர் போகம்
உகந்து தரும் திருமாலை உகந்தோம், நாமே! 3–5

உறவை இசைந்து, இறை இல்லா ஒருவற்கு, என்றும்
ஒண் சுடராய், ஓர் எழுத்தில், ஓங்கி நின்றோம்,

துறவறமும் தூ மதியும் துயரம் தீர்வும்
தூயவர்கட்கு ஆனமையும் இரண்டில் உற்றேம்;
அறம் முயலும் அனைத்து உறவாய் அனைத்தும் ஏந்தும்
அம்புயத்தாள் கணவனை நாம் அணுகப் பெற்றேம்;
பிறவி அறுத்து அடி சூடி அடிமை எல்லாம்
பிரியாத அமரருடன் பெற்றேம் நாமே. 3–6

கருமம் என ஞானம் என அதனுல் கண்ட
உயிர்க் கவரும் காதல் எனக் கானில் ஓங்கும்
அரு மறையால் தரு நிலையில் இந்நாள் எல்லாம்
அடியேனை அலையாத வண்ணம் எண்ணித்
தருமம் உடையார் உரைக்க யான் அறிந்து
தனக்கு என்னு அடிமைக்கு ஆம் வாழ்ச்சி வேண்டித்
திருமகளோடு ஒரு காலம் பிரியா நாதன்
திண் கழலே சேது எனச் சேர்கின்றேனே. 3–7

வினை விடுத்து வியன் குணத்தால் எம்மை ஆக்கி
வெருவுரை கேட்டு அவை கேட்க விளம்பி, நாளும்
தனை அனைத்தும் அடைந்திடத் தான் அடைந்து நின்ற
தன் திருமாதுடன் இறையும் தனியா நாதன்
நினைவு அழிக்கும் வினை வழிக்கு விலக்காய் நிற்கும்
நிகர் இல்லா நெடுங் குணங்கள் நிலைபெறத், தன் –
கனை கழற் கீழ் அடைக்கலமாக் காட்சி தந்து
காரணனும் தன் காவல் கவர்கின்றனே. 3–8

என்னது, யான் செய்கின்றேன் என்னுதாருக்கு
இன் அடிமை தந்துஅளிப்பான், இமையோர் வாழும்
பொன் உலகில் திருவுடனே அமர்ந்த நாதன்
புனல் ஆரும் பொழில் அரங்கம் திகழ மன்னித்
தன் அகலம் அகலாத தகவால் ஓங்கும்
தகவுடனே தன் கருமம் தானே எண்ணி
அன்னை என அடைக்கலம் கொண்டு அஞ்சல் தந்து என் –
அழல் ஆற நிழல் ஆர அளிக்கின்றனே. 3–9

ஒண் தொடியாள் திருமகளும் தானுமாகி
ஒரு நினைவால் ஈன்ற உயிர் எல்லாம் உய்ய
வண் துவரை நகர் வாழ வசுதேவற்காய்
மன்னவற்குத் தேர்ப்பாகன் ஆகி நின்ற

தண் துளவ மலர் மார்பன் தானே சொன்ன
தனித் தருமம் தான் எமக்காய்த், தன்னை என்றும் –
கண்டு களித்து அடி சூட விலக்காய் நின்ற
கண் புதையல் விளையாட்டைக் கழிக்கின்றானே. 3–10

துய்ய மனத்தர் துறை அணுகாத துணையிலியேன்
ஐயம் அறுத்து உனது ஆணை கடத்தல் அகற்றினை, நீ;
கை அமர் சக்கரக் காவல காக்கும் திருவருளால்
வையம் அளந்த அடிக்கீழ் அடைக்கலம் வைத்தருளே. 3–11

அறியாத இடைச்சியரும் அறியும் வண்ணம்
அம்புயத்தாளுடன் அந் நாள் அவதரித்த
குறை யாதும் இல்லாத கோவிந்தா நின் –
குரை கழற்கீழ் அடைக்கலமாம் குறிப்புத் தந்தாய்;
வெறி ஆரும் மலர்மகளும் நீயும் விண்ணில்
விண்ணவர்கள்அடி சூட இருக்கும் மேன்மை
குறையாத வினை அகற்றி அடிமை கொள்ளக்
குறுக ஒரு நல்நாள் நீ குறித்திடாயே. 3–12

தத்துவமும் சாதனமும் பயனும் காட்டும்
தாரம் முதல் இரு நான்கும், தன் கருத்தால்
முத்தி வழி நாம் முயலும் வகையே காண
முகுந்தன் இசைத்து அருள் செய்த ஐந் நால்ஐந்தும்
பத்தி தனில் படிவு இல்லார் பரம் சுமத்தப்
பார்த்தன் தேர் முன்னே தாம் தாழ நின்ற
உத்தமனார் உத்தம நல் உரை நால் எட்டும்
உணர்ந்தவர் தாம் உகந்து எம்மை உணர்வித்தாரே. 3–13

பரக்கும் புகழ் வரும்; பைம் பொருள் வாய்த்திடும்; பத்தர்களாய்
இரக்கின்றவர்க்கு இவை ஈந்தால், அறம் உளது என்று இயம்பார்;
சுரக்கும் கருத்துடைத் தேசிகர் நன்று என நம்மை எண்ணிச்
சுரக்கும் சுரவிகள் போல் சொரிகின்றனர், சொல் அமுதே! 3–14

சோகம் தவிர்க்கும் சுருதிப் பொருள் ஒன்று சொல்லுகின்றோம்;
நாகம் தனக்கும் இராக்கதர்க்கும் நமக்கும் சரண் ஆம்;
ஆகண்டலன் மகன் ஆகிய ஆவலிப்பு ஏறிய, ஓர் –
காகம் பிழைத்திடக் கண் அழிவே செய்த காகுத்தனே. 3–15

ஒருக்காலே சரணுக அடைகின்ருற்கும்
உனக்கு அடிமையாகின்றேன் என்கின்ருற்கும்
அருக்காதே அனைவர்க்கும் அனைவராலும்
அஞ்சேல் என்று அருள் கொடுப்பன், இது தான் ஓதும் –
இருக்காலும் எழில்முனிவர் நினைவினுலும்
இவை அறிவார் செயலுடன் என் இசைவினுலும்
நெருக்காத நீள் விரதம் எனக்கு ஒன்று என்னும்
நெறி உரைத்தார் நிலை உணர்ந்து நிலை பெற்ருேமே. 3–16

பொன்னை இகழ்ந்து, விருகங்கள், புல்லிய புல் உகந்தால்,
மன்னர் எடுப்பது அப் பொன்னலதே; மன் உலகு அனைத்தும்
தன்னை அடைந்திடத் தான் அருள் செய்யும் தனிச் சிலையோன்
பொன் அடி நாம் அடைந்தோம்; புறம் ஆர் என் கொல்செய்திடினே. 3–17

வேதத் திரளின் விதி உணர்ந்தோர்கள் விரித்து உரைத்த
காதல் கதியையும் ஞானத்தையும் கருமங்களையும்
சாதிக்க வல்ல சரணுகதி தனி நின்ற நிலை
ஓதத் தொடங்கும் எழுத்தின் திறத்தில் உணர்மின்களே. 3–18

மூவுலகும் தன் பிழையைத் தானே சாற்ற
முனிவர்களும் தேவர்களும் முனிந்த அந் நாள்
தாவு அரிதாய் எங்கும் போய்த் தளர்ந்து வீழ்ந்த
தனிக் காகம் தான் இரந்த உயிர் வழங்கிக்
காவல் இனி எமக்கு எங்கும் கடன் என்று எண்ணிக்
காண நிலை இலச்சினை அன்று இட்ட வள்ளல்
ஏவல் பயன் இதற்கு ஆறு என்று ஓதும்
எழில் உடையார் இணை அடிக்கீழ் இருப்போம் நாமே. 3–19

திருத்தம் பெரியவர் சேரும் துறையில் செறிவு இலர்க்கு
வருத்தம் கழிந்த வழி அருள்என்ற நம் மண்மகளார்
கருத்து ஒன்ற ஆதிவராகம் உரைத்த கதி அறிவார்
பொருத்தம் தெளிந்து உரைக்கப் பொய் இலா மதி பெற்றனமே. 3–20

இடம் பெற்ருர் எல்லாம் என் உடலாய் நிற்ப
இடர் பிறப்பு என்று இவை இல்லா என்னை அன்பால்
அடம் பற்றும் 'அவன்' என்று நினைந்தான் யாவன் ?
அவன் ஆவி சரியும் போது அறிவு மாறி

உடம்பில் தாரு உபலம் போல் கிடக்க, நானே
உய்யும் வகை நினைத்து உயர்ந்த கதியால், என்தன்
இடம் பெற்று என்னுடன் வாழ எடுப்பன் என்ற
எம்பெருமான் அருள் பெற்று மருள் செற்றோமே. 3-21

இரண்டு உரையாத நம் ஏனம் உரைத்த உரை இரண்டின்
திரண்ட பொருள்கள் தெளிந்து அடி சூடினம்; திண் அருளால்
சுருண்ட நம் ஞானச் சுடர் ஒளி சுற்றும் பரப்பதன்முன்
புரண்டது நம் வினை; போம் இடம் பார்த்து இனிப் போம்அளவே. 3-22

மலையும் குலையும் என்று எண்ணியும், வன் பெரும் புண் திரங்கித்
தலையும் வெளுத்தபின் தானே அழிய இசைகின்றிலீர்;
அலையும் கடல் கொண்ட வையம் அளித்தவன் மெய்அருளே
நிலை என்று நாடி நிலைநின்ற பொய்ம் மதி நீக்குமினே. 3-23

கண்ணன் கழல் தொழக் கூப்பிய கையின் பெருமைதனை
எண்ணம் கடக்க எழுனைத்துறைவர் இயம்புதலால்
திண்ணம் இது என்று தேறித் தெளிந்தபின், சின்மதியோர்-
பண்ணும் பணிதிகள் பாற்றிப் பழந் தொழில் பற்றினமே. 3-24

பொங்கு புனல் ஆறுகளில் புவனம்எல்லாம்
பொன் கழலால் அளந்தவன்தன் தாளால் வந்த
கங்கை எனும் நதிபோலக் கடல்கள் ஏழில்
கமலை பிறந்து அவன் உகந்த கடலே போலச்
சங்குகளில் அவன் ஏந்தும் சங்கே போலத்
தாரில்அவன் தண் துளவத் தாரே போல
எங்கள் குல பதிகள் இவை மேலாம் என்றே
எண்ணிய நல் வார்த்தைகள் நாம் இசைக்கின்றோமே. 3-25

சீர்க் கடலின் திரை என்னத் தகவால் மிக்க
தேசிகராய்த் திண் இருளாம் கடலை நீக்கிப்
பாற்கடலோன் திருவணையாய் நின்று பாரம்
காணாத பவக் கடலைக் கடத்துகின்றான்;
ஈர்க்கும் மரக்கலம் என்ன இறைவர் இன்பம்
எழுந்து அழியும் குமிழி என இகந்து ஒழிந்தோம்;
ஆர்க்கு இனி நாம் என் கடவோம்; நமக்கும் ஆர் என்
கடவார் என்று அடைந்தவர்கட்கு அறிவித்தோமே. 3-26

காசினியின் மணிஅனைத்தும் காயா வண்ணன்
கடைந்து எடுத்த கவுத்துவத்தின் சீர்மைக்கு ஒவ்வா;
காசி முதலாகிய நல்நகரி எல்லாம்
கார் மேனி அருளாளர் கச்சிக்கு ஒவ்வா;
மாசு இல் மனம் தெளி முனிவர் வகுத்த எல்லாம்
மால் உகந்த ஆசிரியர் வார்த்தைக்கு ஒவ்வா;
வாசி அறிந்து இவை உரைத்தோம்; வையத்து உள்ளீர்!
வைப்பாக இவை கொண்டு மகிழ்மின் நீரே. 3–27

அந்தம்இலாப் பேரின்பம் அருந்த ஏற்கும்
அடியோமை அறிவுடனே என்றும் காத்து,
முந்தை வினை நிரை வழியில் ஒழுகாது எம்மை
முன்னிலையாம் தேசிகர்தம் முன்னேசேர்த்து,
மந்திரமும் மந்திரத்தின் வழியும் காட்டி
வழிப்படுத்தி வான் ஏற்றி அடிமை கொள்ளத்
தந்தை யென நின்ற தனித் திருமால் தாளில்
தலை வைத்தோம்; சடகோபன் அருளினாலே. 3–28

தான் தனக்குத் தன்னாலே தோன்றித் தன் ஓர்
ஒளி அணைக்கும் குணத்தாலும் தன்னைக் கண்டு
தான் தனக்குஎன்று அறியாத தன் குணத்தைத்
தன் குணத்தால் தான் இறையில் தானே கூட்டி,
ஊன் மருத்துப் புலன் மனம் மான் ஆங்காரங்கள்
ஒரு மூலப் பிரகிருதி அன்றி நின்ற
நான் தனக்குத் தான் தனக்கு என்று இசைவு தந்த
நாரணனை நால் மறையால் நான் கண்டேனே. 3–29

கழியாத கரு வினையில் படிந்த நம்மைக்
காலம் இது என்று ஒருகால் காவல் செய்து
பழியாத நல் வினையில் படிந்தார் தாளில்
பணிவித்துப் பாசங்கள் அடைய நீக்கிச்
சுழியாத செவ் வழியில் துணைவரோடே
தொலையாத பேரின்பம் தர மேல் ஏற்றி
அழியாத அருள் ஆழிப் பெருமான் செய்யும்
அந்தம் இலா உதவி எலாம் அளப்பார் ஆரே. 3–30

நின் அருளாம் கதி அன்றி மற்றொன்று இல்லேன்;
நெடுங்காலம் பிழை செய்த நிலை கழிந்தேன்;

உன்அருளுக்கு இனிதான நிலே உகந்தேன்;
உன் சரணே சரண் என்னும் துணிவு பூண்டேன்;
மன் இருளாய் நின்ற நிலே எனக்குத் தீர்த்து,
வானவர்தம் வாழ்ச்சி தர வரித்தேன் உன்னே;
இன் அருளால் இனி எனக்கு ஓர் பரம் ஏற்ருமல்;
என் திருமால் அடைக்கலம் கொள் என்னே நீயே. 3-31

பரவும் மறைகள் எலாம் பதம் சேர்ந்து ஒன்ற நின்ற பிரான்,
இரவு அன்றி இரவியின் காலத்து அழைத்த எழில் படையோன்,
அரவும் கருடனும் அன்புடன் ஏந்தும் அடிஇரண்டும்
தர, எந்தமக்கு அருளால், தளரா மனம் தந்தனனே. 3-32

அலர்ந்த அம்புயத்து இருந்து தேன் அருந்தி இன் அகல்
அல்குலார் அசைந்து அடைந்த நடை கொளாதது அனம் ஏனே?
நலம் தவிர்ந்ததால்; அதுஎன்கொல்; நாவின் வீறுஇழந்ததால்;
நா அணங்கு நாதர் தந்த நாவின் வீறு இழந்தது என் ?
சலம் தவிர்ந்து வாது செய்து சாடி மூண்ட மிண்டரைச்
சரிவு இலேன் எனக் கனேத்து உரைத்த எதிராசர்தம்
வலம் தரும் கை நாயஞர் வளேக்கு இசைந்த கீர்த்தியால்
வாரி பாலதாம் அது என்றும் மாசு இல் வாழி வாழியே. 3-33

சடையன் திறலவர்கள் பெரு ஞானக் கடலதனே
இடை அமிழாது கடக்கினும் ஈது அளவென்று அறியார்;
விடை உடன் ஏழு அன்று அடர்த்தவன் மெய்யருள் பெற்ற நல்லோர்
அடையூ அறிந்து உரைக்க, அடியோமும் அறிந்தனமே. 3-34

பா வளம் தமிழ் மறையின் பயனே கொண்ட
பாண் பெருமாள் பாடியது ஓர் பாடல் பத்தில்
காவலனும் கணவனுமாய்க் கலந்து நின்ற
காரணனேக் கருத்து உற நாம் கண்ட பின்பு,
கோவலனும் கோமானும் ஆன அந் நாள்
குரவை பிணே கோவியர் தம் குறிப்பே கொண்டு
சேவலுடன் பிரியாத பெடை போல் சேர்ந்து
தீ வினேயோர் தனிமை எலாம் தீர்ந்தோம் நாமே. 3-35

அதி மறை என ஓங்கும் அரங்கத்துள்ளே
அருள் ஆரும் கடலேக் கண்டவன் நம்பாணன்

ஒதியது ஓர்இரு நான்கும் இரண்டும் ஆன
ஒரு பத்தும் பற்றுக உணர்ந்து உரைத்தோம்;
நீதி அறியாத நிலே அறிவார்க்கு எல்லாம்
நிலே இதுவே என்று நிலே நாடி நின்றேம்;
வேதியர் தாம் விரித்து உரைக்கும் விளேவுக்கு எல்லாம்
விதை ஆகும் இது என்று விளம்பினேமே. 3–36

காண்பனவும் உரைப்பனவும் மற்று ஒன்று இன்றிக்
கண்ணனேயே கண்டு உரைத்த, கடிய காதல் –
பாண் பெருமாள் அருள் செய்த பாடல் பத்தும்
பழ மறையின் பொருள் என்று பரவுகின்றேம்;
வேண் பெரிய விரி திரை நீர் வையத்துள்ளே
வேதாந்த ஆரியன் என்றுஇயம்ப நின்றேம்;
நாண் பெரியோம் அல்லோம் நாம்; நன்றும் தீதும்
நமக்கு உரைப்பார் அருள் என்று நாடுவோமே. 3–37

## 4. பரமபதசோபானம்

தேன் ஏறு தாமரையாள் திரு மார் பன் தன்
திண்அருளால் அவன்அடியில் விவேகம் பெற்று, இங்கு
ஊன் ஏறு பவக் குழியை வெறுத்ததற்பின்,
ஊர் விரத்தியுடன் வினேயின் திரளுக்கு அஞ்சிக்
கூன் ஏறு பிறை இறையோன் சாபம் தீர்த்தான்
குரை கழலே சரண் அடைந்து குரம்பை விட்டு,
வான் ஏறும் வழிப் படிகள் அடைவே கண்ட
வண் புகழ்த் தூப்புல் வள்ளல் அருள்பெற் றேமே. 4–த

அடல் புள் அரசினும் அந்தணர் மாட்டினும், இன் அமுதக்-
கடல் பள்ளி தன்னினும் காவிரி யுள்ளம் உகந்த பிரான்
இடைப் பிள்ளே ஆகி உரைத்தது உரைக்கும், எதிவ்ரனர்-
மடைப் பள்ளி வந்த மணம் எங்கள் வார்த்தையுள் மன்னியதே. 4–1
கள்ள மனத்துடன் கண்டு முயன்ற கடு வினேயால்
நள் இருள் ஆழியில் நல் சுவை ஐந்து என நாடிய, ஓர்-
அள்ளலில் நாளும் விழுந்து அழியாவகை, ஆரண நூல்-
வள்ளல் வழங்கிய வான்படியானவழி இதுவே. 4–2

அரு உருவானவை அனேத்தும் அறிவாரேனும்
அருங் கலேகள் கற்றுரைக்க வல்லாரேனும்

தரும வழியழியாமல் காப்பாரேனும்
தனி மறையின் தாற்பரியம் தருவாரேனும்
இருவினையின் ஒழுக்கத்தால் ஏவல் ஓராது
இங்கே நாம்சிறை இருந்த ஈனம் தீர்க்கும்
திருமகளார் பிரியாத தேவன் திண்ணம்
தேருதார் திண் படியில் ஏருதாரே. 4–3

மறுத் தார் திருவுடன் மார்பில் தரித்தவன் வாசகத்தை
மறுத்தார் மயக்கமும் மற்று அதனுல் வந்த மா நரகும்
நிறுத்து ஆர் பவத்தில் நெடுநாள் உழன்றமை கண்டதனுல்–
வெறுத்து, ஆரண நெறியே, வெள்கி, ஓட விரைவர்களே. 4–4

வான் பட்ட மன் இருளில் மயங்குமாறும்
மறுத்து ஒருகால் எனை ஊழி சென்றுல், அன்று ஓர்–
ஊன் பட்ட உடல் ஆழி வினை ஒழுக்கில்
ஒரு கரையும் காணுதே ஒழுகுமாறும்,
தேன் பட்ட விடம் போலத் தித்திக்கின்ற
சிறு பயனே உறு பயன் என்று அருந்துமாறும்,
தான் பட்ட படி இந் நேர் தானே கண்டு
தளர்ந்திடுமேல் வளர்ந்திடுமே தக்கவாறே. 4–5

உலகத்து உயர்ந்தவர் ஒன்றும் பயனில் உறும் துயரும்
அலகில் படாத அப் போகம் கவர்ந்து எழும் அம்புயத்தோன்
கலகத் தொழில் மதுகைடபரால் படும் கட்டம் எண்ணில்
பல கற்ற மெய்அடியார் படியார் இக் கடும் பவுத்தே. 4–6

தந்திரங்கள் அளவு இலராய்த் தீனத்தால் மிக்க
தார் வேந்தர் தொழ வையம் ஆண்டார், மாண்டார்;
சந்திரனும் சூரியனும் வீயும் காலம்
தாரகையின் வடமீம் அற்றுத், தனி வான் ஆளும்–
இந்திரனும் ஏறு உயர்த்த ஈசன் தானும்
ஈரிரண்டு முகத்தானும் இல்லா அந்நாள்
நம் திருமால் நிலே கண்டார், நாகம் எல்லாம்
நரகு என்று நல் பதமே நாடுவாரே. 4–7

துறவறமே துணிவார் துணுக்கு அற்ற இளந் துணிவோர்
உறவிலர் ஆதலின் நாம் உயர்ந்தாருடன் ஒன்றிநின்றேம்;

மற வழி மாற்றி எம் மையலைத் தீர்த்தவர் மன் அருளால்
கறவை உகந்த பிரான் கழல் சூடும் கருத்தினமே. 4–8

வந்தன போல் வருவனவும் அனந்தம் ஆகி
மாளாத துயர் தரு வல் வினை நெருப்புக்கு
இந்தனமாம் எண் இறந்த காலம் எல்லாம்
இன்னமும் இப் பவக் குழிக்கே இழியா வண்ணம்
வெந்தது ஒரு குழவியை நல் குமரன் ஆக்கும்
வெறித் துளவ வித்தகனார் விதியே கொண்டார்,
பந்தனமாம் அவை அனைத்தும் பாறுகைக்குப்
பழ மறையின் பரம நெறி பயிலுவாரே. 4–9

கரு மாலையில் வரும் கட்டம் கழிக்கும் கருத்துடையார்
ஒரு மால் பெருகும் உயோகில் முயன்றும், அதன்றியும் நம்–
திருமால் அடி இணை திண் சரண் ஆகும் என வரித்தும்
தருமால் இனியவை தானே எனத் தகவு எண்ணுவரே. 4–10

முன் செய்த வினைத் திரளில் முளைத்தது அன்றி
முற்று உள்ள முதல் அரிந்து, முளைத்த கூற்றில்
தன் செய்ய திருவருளால் இசைவு பார்த்துத்
தழல் சேர்ந்த தூலம் எனத் தானே தீர்த்துப்
பின் செய்த வினையில் நினைவு ஒன்றாது ஒன்றும்
பிழை பொறுத்து வேறு உளது விரகால் மாற்றும்
என் செய்ய தாமரைக் கண் பெருமான் எண்ணம்
எண்ணுதார் எட்டு இரண்டும் எண்ணுதாரே. 4–11

உறை இட்ட வாள் என ஊனுள்உறையும் யோகியரை
நறை மட்டு ஒழிவு அற்ற நல் துளவு ஏந்திய நாயகன்தான்
நிறை மட்டு இலாத நெடும் பயன் காட்ட நினைந்து, உடலச்
சிறை வெட்டிவிட்டு வழிப் படுத்தும் வகை செய்திடுமே. 4–12

முன் கருவி ஈரைந்தும் மனத்தில் கூட்டி
முக்கியமாம் மருத்தில் அவை சேர்த்து, அதெல்லாம்
நன்கு உணரும் உயிரினில் சேர்த்து ஐம் பூதத்தை
நண்ணுவித்துத் தான் தன்பால் வைக்கும் நாதன்
ஒன்பதுடன் வாசல் இரண்டு உடைத்தாய் உள்ளே
ஒரு கோடி துயர் விளைக்கும் உடம்பாய் ஒன்றும்

வன் சிறையின் தலைவாசல் திறந்து நம்மை
 வான் ஏற வழிப்படுத்த மனம் உற்றனே. 4–13

தெருள் ஆர் பிரமபுரத்து இறை சேர்ந்து இடர் தீர்ந்தவர்தாம்
மருள்ஆர் பிரமபுரச் சிறை தீர்ந்தபின் வந்து எதிர்கொண்டு
அருளால் அமரர் நடத்த இம் மாயை கடந்ததன் பின்
சுருளார், பவ நரகச் சுழல் ஆற்றின் சுழற்சியிலே. 4–14

விழி அல்லால் வேல் இல்லை, விண்ணின் மாதர்
 மேனிஅல்லால் வில் இல்லை, மீனவற்கு
மொழி அல்லால் அமுது இல்லை, என்று முன் நாள்
 முத்தி வழி முனிந்து அடைந்த மோகம் தீர்ந்தோம்;
கழிஅல்லால் கடல் இல்லை என்பார் போலக்
 காரியமே காரணம் என்று உரைப்பார் காட்டும்
வழி அல்லா வழி எல்லாம் கடந்தோம் மற்றும்
 வான் ஏறும் வழி கண்டோம் மகிழ்ந்திட்டோமே. 4–15

வன் பற்றுடன் மயல் பூண்டு மற்று ஓர் கதியால், இன நாள்–
என் பெற்றது? பெறும் தானமும் எத்தனை போதுஉளதாம்?
துன்பு அற்ற தன் துணிவால் துயர் தீர்க்கும் துழாய் முடியான்
இன்புற்ற நல் வழியால் ஏற்று நல் பதம் எண்ணுவமே. 4–16

பண்டை இரு வினை ஆற்றில் படிந்து பாரம்
 காணுதே ஒழுகிய நாம் பாக்கியத்தால்
வண்டு அமரும் மலர் மாதர் மின்னாய் மன்ன,
 வைசயந்தி மணி வில்லாய் விளங்க, வான் சேர்
கொண்டல் அருள் மழை பொழிய வந்தது ஒப்பாம்
 குளிர்ந்து தெளிந்து அமுதாய விரசை ஆற்றைக்
கண்டு அணுகிக் கருத்தாலே கடந்து மீளாக்
 கரை கண்டோர் கீதி எல்லாம் கதித்திட்டோமே. 4–17

பூ வளரும் திருமாது புணர்ந்த நம் புண்ணியனர்
தாவளமான தனித் திவம் சேர்ந்து தமருடனே
நா வளரும் பெரு நால் மறை ஓதிய கீதம்எலாம்
பா வளரும் தமிழப் பல்லாண்டு இசையுடன் பாடுவமே. 4–18

அடல் உரகம் உண்டு உமிழ்ந்த அருக்கன் போல்,
 அழுக்கு அடைந்து கழுவிய நல் தரளம் போலக்,




கடல் ஒழுகிக் கரைசேர்ந்த கலமேபோலக்,
காட்டுத் தீக் கலந்துஒழிந்த களிறே போல,
மடல் கவரும் மயல் கழிந்த மாதர் போல,
வன் சிறை போய் மன்னர் பதம் பெற்ருர் போல,
உடல் முதலா உயிர் மறைக்கும் மாயை நீங்கி
உயர்ந்த பதம் ஏறிஉணர்ந்து ஒன்றினேமே. 4–19

மண்உலகில் மயல் தீர்ந்து மனம் ததும்பி
மன்ளுத பயன் இகந்து, மாலே அன்றிக்-
கண் இலது என்று அஞ்சி அவன் கழலே பூண்டு
கடும் சிறை போய்க் கரை ஏறும் கதியே சென்று
விண்ணுலகில் வியப்பு எல்லாம் விளங்கக் கண்டு
விண்ணவர் தம் குழாங்களுடன் வேதம் பாடிப்
பண் உலகில் படியாத இசையால் பாடும்
பல்லாண்டே பல்லாண்டும் பாடுவோமே. 4–20

மாளாத வினைஅனைத்தும் மாள, நாம் போய்
வான் ஏறி மலர்மகளார் அன்பு பூணும்
தோளாத மா மணிக்குத் தொண்டு பூண்டு
தொழுது உகந்து தோத்திரங்கள் பாடி ஆடிக்
கேளாத பழ மறையின் கீதம் கேட்டுக்
கிடையாத பேரின்பம் பெருக நாளும்
மீளாத பேரடிமைக்கு அன்பு பெற்ருேம்,
மேதினியில் இருக்கின்ருேம் விதியினுலே. 4–21

## 5. பர மத பங்கம்

எண் தளவு அம்புயத்துள் இலங்கும் அறுகோணமிசை
வண் பணிலம் திகிரி வளை வில் வளை வாய் முசலம்
திண் கையில் அங்குசம் சீர் கமழும் கதை செங் கமலம்
எண் படை ஏந்தி நின்ருன், எழில் ஆழி இறைவனே. 5–1

விடு நெறிஅஞ்சி விடத்தொடக்கிய
விதியர் அடைந்து தொழத் தழைத்து எழு
விழி அருள் தந்து விலக்கு அடிக் களை
விரகில் இயம்பி விலக்கி வைத்தனர்,
கொடு வினை என்பதனைத் தினைத் தனை
கொணர்தல் இகந்த குணத் தனத்தினர்,

குருகையில் வந்து கொழுப்பு அடக்கிய
குலபதி தந்த குறிப்பில் வைத்தனர்,
கடு நரகு அன்பு கழற்றி மற்றொரு
கதி பெறும் அன்பில் எமைப் பொருத்தினர்,
கமலை உகந்த கடற்கிடைக் கடல்
கருணை உயர்ந்த திடர்க்கு ஒருக்கினர்,
படு முதல் இன்றி வளர்த்த நல் கலை
பல பல ஒன்ற எமக்கு உரைத்தனர்,
பழ மறையந்தி நடைக்கு இடைச் சுவர்
பர மதம் என்றது இடித்த பத்தரே. 5–2

போம் உரைக்கும் பொருள் யாம் அறியோம் பொருள் ஆர் மறையில்
தாம் உரைக்கின்றன தாமே அறியும் தரம்உடையார்
ஆம் உரைக்கு என்று இவை ஆய்ந்து எடுத்து ஆரண நூல் வழியே
நாம் உரைக்கும் வகை நல் அருள் ஏந்தி நவின்றனரே. 5–3

சித்தும் அசித்தும் இறையும் எனத் தெளிவுற்று நின்ற
தத்துவம் மூன்றும் தனித்தனி காட்டும் தனி மறையால்
முத்தி வழிக்கு இது மூலம் எனத் துணிவார்களையும்
கத்தி மயக்கும் கதகரை நாம் கடிகின்றனமே. 5–4

முத்தின் வடங்கள் என முகுந்தன் புனை மூ வகையாம்
சித்தில் அருஞ் சுருதிச் செவ்வை மாறிய சிந்தைகளால்
பத்தில் இரண்டு மெய்க்கப் பகட்டும் பர வாதியர்தம்
கத்தில் விழுந்து அடைந்த அழுக்கு இன்று கழற்றினமே. 5–5

நாக்கு இயலும் வகை நம்மை அளித்தவர் நல் அருளால்
பாக்கியம் ஏந்திப் பரன்அடியார் திறம் பார்த்ததற்பின்
தாக்கியர் தங்கள் தலைமிசை தாக்கித் தனி மறைதான்
போக்கியம் என்றதனில் பொய்ம் மதங்களைப் போக்குவமே. 5–6

தீ வகை மாற்றி அன்று ஓர் தேரில் ஆரணம் பாடிய, நம்–
தேவகி சீர் மகனார் திறம்பா அருள் சூடிய நாம்
மூ வகையாம் அறியாத் தத்துவத்தின் முகம் அறிவார்
நா வகையே நடத்தும் நடை பார்த்து நடந்தனமே. 5–7

வேலைப் புறம் அகம் காண்பது போல் வேத நல் நெறி சேர்
நூலைப் புறம் அகம் காண்டலில் நுண்அறிவு இன்றி நின்றீர்;

மாலேப் பெற வழி காட்டிய தேசிகர் வாசகமே
ஓலேப் புறத்தில் எழுதுகின்றேம் உள் எழுதுமினே. 5–8

சிறை நிலேயாம் பவத்தில் சிறு தேன் இன்பம் உண்டு உழல்வார்
மறை நிலே கண்டு அறியா மயல் மாற்றிய மன் அருளே
துறை நிலே பாரம் எனத் துளங்கா அமுதக் கடலாம்
இறை நிலே யாம்உரைத்தோம், எம் குருக்கள் இயம்பினவே. 5–9

வெறி ஆர் துளவுடை வித்தகன் தன்மையின் மெய் அறிவார்
குறியார் நெடியவர் என்று ஒரு குற்றம் பிறர்க்கு உரையார்
அறியார் திறத்தில் அருள் புரிந்து ஆரண நல் நெறியால்
சிறியார் வழிகள் அழிப்பதும் தீங்கு கழிப்பதற்கே. 5–10

மிண்டு உரைக்க விரகு தரும் தருக்கம் கொண்டே
வேண்டுங்கால் வேண்டுவதே விளம்புகின்ருர்;
கண்டதற்கு விபரீதம் கத்துகின்ருர்;
காணுத குறை மறையிற் காட்ட நிற்பார்;
பண்டுஒருத்தன் கண்டுஉரைத்தேன் நானே என்னப்
பல வகையில்உபாதிகளால் படிந்து வீழ்வார்;
கொண்டல் ஒக்கும்திரு மேனி மாயக் கூத்தன்
குரை கழல் சேர் விதி வகையில் கூடாதாரே. 5–11

கண்டது மெய் எனில் காணும் மறையில் அறிவு கண்டோம்;
கண்டது அலாதது இலதுஎனில் கண்டிலம், குற்றம் இதில்;
கண்டது போல் மறை காட்டுவதும் கண்டது ஒத்ததனுல்
உண்டது கேட்கும் உலோகாயதர் என்று மீறுவதே. 5–12

கண்டதனுல் காணுதது அனுமிக்கின்ருர்;
கண்டு ஒருத்தன் உரைத்ததனைக் கவருகின்ருர்;
உண்டு பசி கெடும் என்றே உணர்ந்து உண்கின்ருர்;
ஒன்ருலே ஒன்றைத் தாம் சாதிக்கின்ருர்;
பண்டு முலே உண்டதனுல் ம்லே உண்கின்ருர்;
பார்க்கின்ருர், பல அல்லாத் தம்மை; மற்றும்
கண்டு மதி கெட்ட நிலே காணகில்லார்;
காணுதது இலது என்று கலங்குவாரே. 5–13

காணுதது இலது எனும் கல்வியினுரைக் கடிந்தன்பின்
கோண் ஆர் குதர்க்கங்கள் கொண்டே குழப்பும் பவுத்தர்களில்

நாணுது அனைத்தும் இலது என்றும் நால் வகை அன்று இதுஎன்றும்
வாணுள் அறுக்கின்ற மத்திமத்தான் வழி மாற்றுவமே. 5–14

மானம் இலை; மேயம் இலை என்றும் மற்று ஓர்
வாத நெறிஇலை என்றும் வாது பூண்ட
தானும் இலை தன்உரையும் பொருளும் இல்லை
தத்துவத்தின் உணர்த்தி சயம்இல்லை என்றும்
வானவரும் மானவரும் மனமும் வெள்க
வளம் பேசும் மதி கேடன் மத்திமத்தான்
தேன நெறி கொண்டு அனைத்தும் திருடா வண்ணம்
செழு மதி போல் எழும் மதியால் சேமித்தோமே. 5–15

முற்றும் சகத்து இலது என்றே பகட்டிய முட்டரை, நாம்–
சுற்றும் துறந்து துறையில் நின்றே துகள்ஆக்கியபின்
மற்றொன்று இலது மதி பல உண்டுஎன்று வஞ்சனையால்
சற்றும் துறந்த யோகாசாரனைச் சதிக்கின்றனமே. 5–16

உளக் கதியை நாம் உள்ளி உள்ளம் தேறி
உலகத்தார் உகந்து இசைய உலகு உண்டு என்றோம்;
இளக்க அரிதாகிய நல் தருக்கம் சேர்ந்த
எழில் மறையில் ஈசனுடன் எம்மைக் கண்டோம்;
விளக்கு நிரைபோல் மதிகள் வேருய் வேறென்று
அறியாதே விளங்கும் என விளம்புகின்ற
க(ள்)ளக் கருத்தன் கண் இரண்டும் அழித்தோம் நாணுக்–
காகம் போல் திரிந்தவன் என் கதறும் ஆறே. 5–17

பொருள் ஒன்று இலது என்று போதம் ஒன்றும் கொண்ட பொய்யரை, நாம்–
தெருள் கொண்டு தீர்த்தபின் காண ஒண்ணுப் பொருள் தேடுகின்ற
மருள் கொண்ட சூது உரைக்கும் சௌத்திராந்திகன் வண்ணிக்கை நாம்
இருள் கொண்ட பாழ்ங் கிணறு என்று இகழ்ந்து ஓட இயம்புவமே. 5–18

நிலை யில்லாப் பொருள் மதியை விளைத்துத் தான்சேர்
நிறம் கொடுத்துத் தான் அழியும், தன்ணுல்வந்த
நிலையில்லா மதி தன்னில் நிறத்தைக் காணும்,
இது காணும் பொருள் காண்கை என்ற நீசன்
முலை இல்லாத் தாய் கொடுத்த முலைப் பால் உண்ணும்
முகம் இல்லா மொழி எனவே மொழிந்த வார்த்தை

தலை இல்லாத் தாள் ஊரும் கணக்காய் நின்ற
கட்டளை நாம் கண்டு இன்று காட்டினேமே. 5–19

காண்கின்றவன் இலை, காட்சியும் கண்டதும் உண்டு, அவைதாம்–
ஏண் கொண்டன அன்று, இவற்றில் குணமும் நிலையும் இலை,
சேண் கொண்ட சந்ததியால் சேர்ந்தும் ஒன்று என நிற்கும் என்ற
கோண் கொண்ட கோள் உரை வைபாடிகன் குறை கூறுவமே. 5–20

கும்பிடுவார் ஆர்என்று தேடுகின்றார்
குணங்களையும் தங்களுக்குக் கூறுகின்றார்
தம் படியைத் தமர்க்கு உரைத்துப் படிவிக்கின்றார்
தமக்கு இனிமேல் வீடு என்று சாதிக்கின்றார்
தம் புடவை உணல் குறித்து நெடிது எண்கின்றார்
சந்ததிக்குத் தவம் பலிக்கத் தாம் போகின்றார்
செம்படவர் செய்கின்ற சிற்றினிப்பைச்
சேவகப் பற்றுடனே நாம் செகுத்திட்டோமே. 5–21

வேதங்கள் மௌலி விளங்க வியாசன் விரித்த நல் நூல்
பாதங்கள் ஆன பதினாறில் ஈசன் படி மறைத்துப்
பேதங்கள் இல்லை என்று ஓர் பிரமப் பிச்சு இயம்புகின்ற
போதம் கழிந்தவனைப் புத்தர் மாட்டு உடன் பூட்டுவமே. 5–22

பிரிவு இல்லா இருள் ஒன்று பிணக்கு ஒன்று இல்லாப்
பெரு வெயிலை மறைத்து உலகம் காட்டும் என்ன
அறிவில்லா அறிவு ஒன்றை அவித்தை மூடி
அகம் புறம் என்று இவை அனைத்தும் அமைக்கும் என்பார்,
செறிவு இல்லாப் புத்தருடன் சேர்ந்து கெட்டார்,
சிவனையும் ஈசனையும் சிதைக்கப் பார்த்தார்,
நெறி இல்லா நேர் வழியும் தானே ஆனான்
நெடு மாலை நாம் அடைந்து நிலை பெற்றோமே. 5–23

சோதனை விட்டு ஒருத்தன் சொல் மெய் எனச் சோகதரைச்
சேதனை அற்றவர் என்று சிதைத்தபின், சீவர்கட்குஓர்
வேதனை செய்கை வெறும் மறம் என்று விளம்பிவைத்தே
மா தவம் என்று மயிர் பறிப்பார் மயல் மாற்றுவமே. 5–24

சொன்னார் தாம் சொன்னது எலாம் துறவோம் என்றும்,
சொன்னதுவே சொன்னது அலது ஆகும் என்றும்,

தின்ஞதும் தின்னுமதும் ஏகமென்றும்,
சிறியனுமாம் பெரியனுமாம் சீவன் என்றும்,
மன்ஞதும் மன்னுமதும் ஒன்றே என்றும்,
வையம் எலாம் விழுகின்றது என்றும் என்றும்,
தென் நாடும் வட நாடுஞ் சிரிக்கப் பேசும்
சின நெறியார் சினம் எல்லாம் சிதைத்திட்டோமே. 5–25

ஏகாந்திகம் ஒன்றும் இல்லை என்று ஆசையைத் தாம் உடுப்பார்
சோகாந்தமாகத் துறப்புண்டபின் தொழில் வைதிகம் என்று
ஏகாந்திகள் சொன்ன ஈசன் படியில் விகற்பம் எண்ணும்
லோகாந்த வீணர்தம் வேதாந்த வார்த்தை விலக்குவமே. 5–26

ஒன்று எனவும் பல எனவும் தோற்றுகின்ற
உலகு எல்லாம் ஒரு பிரமம்தானே ஆக்கி
நன்று எனவும் தீது எனவும் பிரிந்த எல்லாம்
நன்று அன்று தீது அன்று என நவின்ருர்
கன்றும் அலர் பசுவும் அலர் ஆகி நின்றே
கன்றுஆகிப் பசுஆகி நின்ற வண்ணம்
இன்று மறை மாட்டுக்கு ஓர் இடையன் ஆன
ஏகாந்தி இசைந்திட நாம் இயம்பிஞேமே. 5–27

சாயா மறைகளில் சத்தம் தெளிந்திடச் சாற்றுதலால்
தூயார் இவர் என்று தோன்ற நின்றே பல சூதுகளால்
மாயா மதமும் மறு சின வாதும் பவுத்தமும் சேர்
வையாகரணர் சொல்லும் மறு மாற்றங்கள் மாற்றுவமே. 5–28

கலகத்தில் கலங்கி வரும் காணிக்கு எல்லாம்
கண் ஞறு சதிர வழி கட்டுவார் போல்
உலகத்தில் மறை சேர்ந்த உரைகள் தம்மால்
ஒரு பிழையும் சேராமல் உபகரித்தார்
பல கத்தும் பவுத்தர் முதலான பண்டைப்
பகல் கள்ளர் பகட்டு அழிக்கப் பரவும் பொய்யாம்
சில கற்றுச் சித்தாந்தம் அறியகில்லாச்
சிறுவர் இனி மயங்காமல் சேமித்தோமே. 5–29

கண்டது அலாதன கட்டுதலால் கண்ட விட்டதனுல்
பண்டு உளதான மறைக்குப் பழமையை மாற்றுதலால்

கொண்டதும் ஈசனைக் கொள்ளாவகை என்று கூறுதலால்
கண்டகராய் நின்ற காணாதர் வாதம் கழற்றுவமே. 5–30

ஆகமத்தை அனுமானம் என்கையாலும்
அழியாத மறை அழிக்க நினைத்தலாலும்
போகம் அற்று ஓர் உபலம் போல் கிடக்கைதானே
புண்ணியர்க்கு வீடு என்று புணர்த்தலாலும்
மாகம் ஒத்த மணி வண்ணன் படியை மாற்றி
மற்றவனுக்கு ஒரு படியை வகுத்தலாலும்
காகம் ஒத்த காணாதன் கண்ணை வாங்கிக்
காக்கைக்கு ஆர் என்று அலறக் காட்டினோமே. 5–31

கோதம நூல்களைக் குற்றம் இலா வகை கூட்டலும்ஆம்;
கோது கழித்து ஒரு கூற்றில் குணங்களைக் கொள்ளவும்ஆம்;
யாதும் இகந்து ஒரு நீதியை யாமே வகுக்கவும்ஆம்;
வேதியர் நல்நயவித்தரம் என்பது மெய்யுளதே. 5–32

நால் மறைக்குத் துணையாக நல்லோர் எண்ணும்
நால் இரண்டில் ஒன்றான நய நூல் தன்னில்
கூன் மறைத்தல் கோது உளது கழித்தல் மற்று ஓர்
கோணாத கோது இல் வழி வகுத்தல் அன்றி
ஊன் மறைத்த உயிர் ஒளி போல் ஒத்தது ஒவ்வாது
உயிர் இல்லாக் காணாதம் உரைத்த எல்லாம்
வான் மறைக்க மடி கோலும் வண்ணம் என்றோம்
மற்று இதற்கு ஆர் மறு மாற்றம் பேசுவாரே. 5–33

ஈசனும் மற்ற அணங்கும் இலதுஎன்று எழில் நால் மறையில்
பேசிய நல் வினையால் பெரும் பாழுக்கு நீர் இறைக்கும்
நீசரை நீதிகளால் நிகமாந்தத்தின் நூல் வழியே
மாசு இல் மனம் கொடுத்து மறு மாற்றங்கள் மாற்றுவமே. 5–34

கனை கடல் போல் ஒரு நீராம் சூத்திரத்தைக்
கவந்தனையும் இராகுவையும் போலக் கண்டு
நினைவுடனே நிலைத்தருமம் இகந்து நிற்கும்
நீசர் நிலை நிலைநாடா வண்ணம் எண்ணி
வினை பரவு சைமினியார் வேத நூலை
வேதாந்த நூலுடனே விரகால் கோத்த

முனையுடைய மூழுமதி நம் முனிவர் சொன்ன
மொழி வழியே வழிஎன்று முயன்றிட்டோமே. 5–35

முக் குணமாய் நின்ற மூலப் பிரகிருதிக்கு, அழியா
அக் குணம் அற்ற அருந் துணை மற்றதற்கு ஈசன்இலை;
இக் கணனைப் படி ஐயைந்தும் எண்ணில் முன் முத்திஎன்னும்
பக்கண வீணர் பழம் பகட்டைப் பழுது ஆக்குவமே. 5–36

ஈசன்இலன் என்பதனால் என்றும் சீவர்
எங்கும் உளர் இலர் உணர்வை என்றத்தால்
பாசம் எனும் பிரகிருதி தன்னால் என்றும்
பலமும் இலை வீடும் இலை என்னும் பண்பால்
காசினி நீர் முதலான காரியங்கள்
கச்சபத்தின் கால் கை போல் என்னும் கத்தால்
நாசமலது இலை காணும்; ஞாலத் துள்ளீர்!
நாம் இசையாச் சாங்கியத்தை நாடுவார்க்கே. 5–37

தாவிப் புவனங்கள் தாள்இணை சூட்டிய, தந்தை உந்திப்
பூவில் பிறக்கினும், பூதங்கள் எல்லாம் புணர்த்திடினும்
நாவில் பிரிவு இன்றி நாமங்கை வாழினும், நால்மறையில்
பாவித்தது அன்றி உரைப்பது பாறும் பதர்த் திரளே. 5–38

காரணனாய்உலகு அளிக்கும் கண்ணன் தேசைக்
கண்ணாடி நிழல் போலக் காண்கையாலும்,
தாரணையின் முடிவான சமாதி தன்னைத்
தனக்கு ஏற்றும் விளக்கு என்று தனிக்கையாலும்,
காரணமாம் அது தனக்குப் பயனும் சிவன்
கைவலிய நிலை என்று கணிக்கையாலும்,
கோரணியின் கோலம் எனக் குறிக்கலாகும்
கோகனகத்து அயன் கூறும் சமயக் கூற்றே. 5–39

சாது சனங்கள் எல்லாம் சச்சை என்னும் சலம் புணர்த்தார்
கோதம சாபம் ஒன்றால் கொடுங் கோலங்கள் கொண்டு உலகில்
பூத பதிக்கு அடியார்என நின்று அவன் பொய் உரையால்
வேதம் அகற்றி நிற்பார் விகற்பங்கள் விலக்குவமே. 5–40

மாதவனே பரன் என்று வையம் காண
மழு ஏந்திய மயல் தீர்க்க வல்ல தேவன்

கைதவம் ஒன்று உகந்தவரைக் கடிய சாபம்
கதுவியதால் அதன் பலத்தைக் கருதிப், பண்டை
வேத நெறி அணுகாது விலங்கு தாவி
வேருக விரித்து உரைத்த விகற்பம் எல்லாம்
ஓதுவது குத்திரத்துக்கு என்று உரைத்தான்
ஓதாதே ஓதுவிக்கும் ஒருவன் தானே. 5-41

கந்த மலர் மகள் மின்னும் கார் ஆர் மேனிக்
கருணை முகில் கண்ட கண்கள் மயிலாய் ஆலும்
அந்தம் இல் பேரின்பத்தில் அடியரோடே
அடிமை எனும் பேரமுதம் அருந்தி வாழத்
தந்த மதி இழந்து அரனுர் சமயம் புக்குத்
தழல் வழி போய்த் தடுமாறித் தளர்ந்து வீழ்ந்தீர்
சந்த நெறி நேர் அறிவார் சரணம் சேர்ந்து
சங்கேதத்து அவம் முனிவீர் தவிர்மின் நீரே. 5-42

யாதும் இலாத அன்றும் யவர்க்கும் நன்றி எண்ணிய, நம்
மாதவனுர் வதனத்து அமுது உண்ணும் வலம்புரி போல்
வாதுகளால் அழியா மறை மௌலியின் வான் பொருளே
ஓதிய பஞ்சாத்திரம் உகவாரை ஒழுக்குவமே. 5-43

பூ அலரும் திரு உந்திப் புனிதன் வையம்
பொன் அடியால் அளந்து இருவர் போற்ற நின்ற
நா அலரும் கலைகள் எலாம் தன்னை நாட
நாடாத நல் நிதியா நணுகும் நாதன்
கோவலனாய் நிரை அளித்த நிறை போல் வேதம்
கோவாகக் கோமானாய் அதன் பால் சேர்த்துக்
காவல் இது நல்உயிருக்கு என்று காட்டும்
கார்த்தயுகக் கதி கண்டோம் கரை கண்டோமே. 5-44

நமக்கு ஆர் துணை? என நாம்என்று அருள் தரு நாரணனுர்
உமக்கு ஆறு இவை என்று அடியிணை காட்ட உணர்ந்து அடையும்
எமக்கு ஓர் பரம் இனி இல்லாது இரு வினை மாற்றுதலில்
தமக்கே பரம் என்று தாம் முயலும் தரம் சாற்றுவமே. 5-45

பலத்தில் ஒரு துவக்குஅற்ற பதவி காட்டிப்
பல் உயிரும் தடுமாறப் பண்ணுகின்ற

கலித் திரளின் கூடுங் கழுதைக் கத்து மாற்றிக்
கண்ணுடையார் கண்டுஉரைத்த கதியைச் சொன்னேம்;
வலத்து இலகும் மறு ஒன்றல் மறு ஒன்று இல்லா
மா மணியாய் மலர் மாதர் ஒளிஆம், அந் நல்
நலத்தில் ஒரு நிகர் இல்லா நாதன் பாதம்
நல் வழியர் அல்வழக்கார் நடத்துவாரே. 5–46

எல்லார்க்கும் எளிதான ஏற்றத்தாலும்
இனி உரைக்கை மிகையான இரக்கத்தாலும்
சொல் ஆர்க்கும் அளவாலும் அமைதலாலும்
துணிவு அரிதாய்த் துணை துறக்கும் சுகரத்தாலும்
கல்லார்க்கும் கற்றார் சொல் கவர்தலாலும்
கண்ணன் உரை முடி சூடி முடித்தலாலும்
நல்லார்கும் தீயார்க்கும் இதுவே நன்றும்
நாரணற்கே அடைக்கலமாய் நணுகுவீரே. 5–47

பண்டை மறைக்குப் பகைஎன நின்ற பர மதங்கள்
கொண்டவர் கொள்ளும் பயன் ஒன்று இலது எனும் கூர் மதியால்
வண் துவரைக்கு அரசான நம் மாயனை, வான்உலகில்
கண்டு களிப்பது எனும் காதல் ஒன்றைக் கருதுவமே. 5–48

கலம் திகழும் போகங்கள் கண்டு வெள்கிக்
காரியமும் காரணமும் கடந்து நாம் போய்க்
குலம் திகழும் குருக்கள் அடிசூடி மன்னும்
குற்றேவல் அடியவர் தம் குழாங்கள் கூடி
வலம் திகழும் திருமகளும் மற்று இடத்தே
மன்னிய மண்மகளாரும் நீளையாரும்
நலம் திகழ வீற்றிருந்த நாதன் பாதம்
நமக்கு இதுவே முடி என்ன நண்ணினேமே. 5–49

மானங்கள்இன்றி வகுத்து உரைக்கின்ற மதங்கள் எலாம்
தானங்கள் அன்று தரும நெறிக்கு என்று சாற்றியபின்
வானம் கவர்ந்து மறை முடி சூடிய மாதவத்தோர்
ஞானங்கள் ஒன்ற நடக்கின்ற நல் வழி நாடுவமே. 5–50

தன்அடிக் கீழ் உலகு ஏழையும் வைத்த தனித் திருமால்
பொன்அடிக்கு ஏற்கின்ற புண்ணியர் கேண்மின், புகல்அறிவார்

முன் அடி பார்த்து முயலுதலால், அவர் சாயை எனப்
பின்அடி பார்த்து நடந்து பெரும் பதம் ஏறுவமே. 5–51

வையம் எலாம்இருள் நீக்கும் மணி விளக்காய்
மன்னிய நால் மறை மௌலி மதியே கொண்டு
மெய் அலது விளம்பாத வியாசன் காட்டும்
விலக்கு இல்லா நல் வழியே விரைந்து செல்வீர்;
ஐயம் அற அறு சமயக் குறும்பு அறுத்தோம்;
அணி அரங்கர் அடியவர்க்கே அடிமை செய்தோம்;
மைய கடல் வட்டத்துள் மற்றும் தோற்றும்
வாதியர் தம் வாய்ப் பகட்டை மாற்றினேமே. 5–52

கோது அவம் ஒன்று இல்லாத தகவே கொண்ட
கொண்டல் என வந்து உலகில் ஐவர்க்கு அன்று, ஓர் –
தூதுவனும் ஒருகோடி மறைகள் எல்லாம்
தொடர்ந்து ஓடத் தனி ஓடித் துயரம் தீர்த்த
மாதவனார் வட கொங்கில் வானி ஆற்றின்
வண்ணிகை நல் நடம் கண்டு மகிழ்ந்து வாழும் –
போது, இவை நாம் பொன் அயிந்தை நகரில் முன் நாள்–
புணராத பர மதப் போர் பூரித்தோமே. 5–53

திகிரி மழு உயர் குந்தம் தண்டு அங்குசம் பொறி
சிதறு சத முக அங்கி வாள் வேல் அமர்ந்ததும்
தெழி பணிலம் சிலை கண்ணி சீரங்கம் செவ் இடி
செழிய கதை முசலம் திருலம் திகழ்ந்ததும்
அகில உலகுகள் கண்டையாய் ஓர் அலங்கலில்
அடைய அடைவில் இலங்க ஆசு இன்றி நின்றதும்
அடியும் அருகு அணையும் அரவுஆம் என்ன நின்று அடி
அடையும் அடியரை அன்பினால் அஞ்சல் என்பதும்
மகிழும் அமரர் கணங்கள் வானம் கவர்ந்திட
மலியும் அசுரர் புணர்த்த மாயம் துரந்ததும்
வளரும் அணி மணி மின்ன வான் அந்தி கொண்டிட
மறைமுறை முறைவணங்க மாறுஇன்றி வென்றதும்
சிகி இரவி மதியம் உமிழ் தேசு உந்த எண்திசைத்
திணிமருள் செக உகந்து சேமங்கள் செய்ததும்
திகழ் அரவணை அரங்கர் தேசு என்ன மன்னிய
திரி சுதரிசனர் செய்ய ஈர் எண் புயங்களே. 5–54

## 6. மெய்விரத மான்மியம்

வாழி அருளாளர், வாழி அணி அத்திகிரி,
வாழி எதிராசன் வாசகத்தோர், வாழி
சரணுகதி எனும் சார்வுடன் மற்ெறான்றை
அரணுகக் கொள்ளாதார் அன்பு. 6–1

எண் திசையும் கடல்ஏழும் மலைகள்ஏழும்
ஈரேழு வையகமும் படைத்து இலங்கும்
புண்டரிகத்து அயன் புணர்த்த பெரிய வேள்விப்
புனித நறும் போக்கியத்தை உவந்து வந்து
தொண்டை எனும் மண்டலத்தின் நடுவில் பாரில்
தூ நில மெய்விரதத்துத் தோன்றி நின்ற
கொண்டல் அருள் குணமே நாம் கூறுகின்றோம்
கூர்மதியீர் குறியாகக் கொண்மின் நீரே. 6–2

வம்மின், புலவீர்! அருளாளப் பெருமாள் என்றும், அருள்ஆழி
அம்மான் என்றும், திருமகளைப் பெற்றும்என்நெஞ்சம் கோயில் கொண்ட
பேரருளாளர் என்றும், வியப்பா விருது ஊதும்படி கரைபுரண்ட
கருணைக் கடலை, இவ் வண்ணம் பேசுவீர் ? ஈது என்ன பாங்கே! 6–3

ஒன்றே புகல்என்று உணர்ந்தவர் காட்டத், திருவருளால்
அன்றே அடைக்கலம் கொண்ட நம் அத்திகிரித் திருமால்
இன்றே இசையின் இணை அடி சேர்ப்பர், இனிப் பிறவோம்;
நன்றே வருவது எல்லாம் நமக்குப் பரம் ஒன்று இலதே. 6–4

வம்பு அவிழ் போது அமர் மாதர் உகந்த அம் மாநிதியைத்
தன் பலமே கொண்டு காணக் கருதிய தாமரையோன்
முன் பல குற்றத்து வல் வினை மொய்க்க முகிழ் மதியாய்
அம்புலி வேண்டிய பாலனைப் போல அழுதனனே. 6–5

அடங்காக் கரணங்கள் ஐந்துடன் ஆறு அடக்கி முனம்
நெடுங்காலம் இந் நிலமே நிலையாப் பூண்டு நீடு உறைவான்
சடங்கால் பெரிய தவங்கள் செய்தேன் என்ன தன்மை இதுஎன்று
இடம் காத்திருந்த திசைமுகன் தன்னை இகழ்ந்தனனே. 6–6

விண்ணுலகில் வீற்றிருந்த மேன்மையாலும்
வேதங்கள் ஈரிரண்டும் விரித்தலாலும்

கண்ணனை நான் கருத்துறவே காண்பன் என்னக்
    காணமல் விலக்கிய தன் வினையைக் காண
எண்ணிய நல் புவனங்கள் ஏழும் ஆறும்
    இருமூன்று தீவமும் எட்டுஇடமும் விட்டுப்
பண்ணிய நல்விரதம்எலாம் பலிக்கும் என்று
    பாரதத்தில் பங்கயத்தோன் படிந்திட்டானே. 6–7

எத் திசை நிலனும் எய்தி அருந் தவம் செய்த அந் நாள்
சத்திய விரதம் செல்வாய் என்ற ஓர் உரையின் சார்வால்
அத் திசைச் சென்று அழைத்து அங்கு அமரர் இல் எடுப்பான்தன்னை
உத்தர வேதி செய் என்று உரை அணங்கு இறை உரைத்தான். 6–8

உத்தம அமர்த் தலம் அமைத்தது ஓர் எழில் தனுவின் உய்த்த கணையால்
அத்திர அரக்கன் முடி பத்தும் ஒரு கொத்து என உதிர்த்த திறலோன்
மத்துறு மிகுத்த தயிர் மொய்த்த வெணெய் வைத்தது உணும் அத்தன் இடமாம்
அத்திகிரி பத்தர் வினை தொத்து அற அறுக்கும் அணி அத்தி கிரியே. 6–9

திண் மணிகள் பொன்னுடனே சேர்தலாலும்
    சிதையாத நூல் வழியில் சேர்த்தியாலும்
வண்மை எழும் ஈரிரண்டு வண்ணத்தாலும்
    வானவர்க்கும் வியப்பான வகுப்பினாலும்
ஒண்மையுடை வாசி விளி ஓசையாலும்
    ஒருகாலும் அழியாத அழகினாலும்
மண்மகளார்க்கு அலங்காரம் என்ன மன்னும்
    மதிள் கச்சி நகர் கண்டு மகிழ்ந்திட்டானே. 6–10

காமங்கள் பல கொண்ட வேதம் கொண்டு
    கைதவமே செய்வார்க்குக் காணகில்லாப்
பூமங்கை கேள்வனை நான் கண்டு போற்றப்
    புண்ணியத்தில் நிகரில்லா விரதம் பூண்டேன்;
சாமங்கள் கழிவதன் முன் சடக்கெனப் போய்த்
    தன்ஆற்றில் தனிஇருந்து தவம் செய்கின்ற
நா மங்கை வந்திட நீ அழைப்பாய் என்று
    நன் மகனை நான்முகன்தான் நவின்றிட்டானே. 6–11

அன்ன வடிவாள் அசையும் அன்ன நடையாள் உயரும்
    அன்னவரசு ஏறி வருவாள்

அத்தன் அயன் அத் தனயன் உத்திதனை அத்து இது என–
உத்திபுரியாள்
நல் நடை விடா நடம் இது என்ன நடவா நடுவு–
நண்ணு குவடுஏறி இழிவாள்
நல் பதிகள் அல் பதிகள் கல் புரள அற்புத
மருத் கதியினல்
கல் நடை விடா இடம் இல் உன்னதி சிறு விகடம்
மன்னு கிரி கூடம் இடியக்
கட்டு அவிடை இற்று விழ முற்றும் விழி உறு அடைய
விட்டு அருகு உற
அன்ன நய சீர் அயன் இது என் என விழா அமரர்–
மன்னு பதி ஏறி மகிழ
அச்சுதன் அணைத் தனுவில் அத் திசை வரத் தகைய–
அற்று அணுகினள். 6–12

அன்று நயந்த அயமேத மா வேள்வி–
பொன்ற உரை அணங்கு பூம் புனலாய்க்—கன்றி வர
ஆதி அயனுக்கு அருள் செய்து அணையாளன்
தாதை அரவணையான் தான். 6–13

தரணியில் மன்னி அயனர் தனித் தவம் காத்த பிரான்
கருணை எனும் கடல் ஆடித் திரு அணை கண்டதற்பின்
திரள் நரகு எண்ணிய சித்திரகுத்தன் தெரித்து வைத்த
கருணையில் ஏறிய சூழ் வினை முற்றும் துறந்தனமே. 6–14

சுக லேசம் எண்ணிய சூழ் வினை தீர்க்கத் துணிந்து, அயனர்–
அகலாத அன்புடன் கொண்ட அயமேத வேதியின்மேல்
புகல் ஓங்கு பொன் மலை அன்ன ஓர் புண்ணிய கோடியுடன்
பகலோன் பகல் விளக்காகப் பரஞ் சுடர் தோன்றியதே. 6–15

பெருமையுடை அத்திகிரிப் பெருமாள்வந்தார்,
பேராத அருள் பொழியும் பெருமாள் வந்தார்,
அருமறையின்உச்சி தனில் நின்றார்வந்தார்,
அங்கமுடன் அவை ஆகும் அரியோர்வந்தார்,
திருஉரையாய்த் தாம் பொருளாய் நிற்பார்வந்தார்,
திருஅருளால் செழுங் கலைகள் தந்தார் வந்தார்,
மருவலர்க்கு மயக்குஉரைக்கும் மாயோர் வந்தார்,
வான்ஏற வழி தந்தார் வந்தார் தாமே. 6–16

அத்திகிரி அருளாளப் பெருமாள் வந்தார்,
ஆனை பரி தேரின்மேல் அழகர் வந்தார்,
கச்சிதனில் கண் கொடுக்கும் பெருமாள் வந்தார்,
கருத வரம் தரு தெய்வப் பெருமாள் வந்தார்,
முத்தி மழை பொழியும் முகில் வண்ணர் வந்தார்,
மூலம் என ஓலமிட வல்லார் வந்தார்
உத்தர வேதிக்குள்ளே உதித்தார் வந்தார்,
உம்பர் தொழும் கழலுடையார் வந்தார் தாமே. 6–17

இரு பரிதி ஏய்ந்த மகுடமும்,
எழில் மதி திகழ்ந்த வதனமும்,
இரு வகை இலங்கு குழைகளில்,
எதிர் பொர உகந்த மகரமும்,

ஒரு தகவு உயர்ந்த திருமகள்,
ஒளி மறுவின் மன்னும் அகலமும்,
உரு அரு உமிழ்ந்த உதரமும்,
உலகு அடைய நின்ற கழல்களும்,

மருவினிடை பொங்கு புனல் என,
மலை குனிய நின்ற மலை என,
மருள் அற விளங்கும் ஒளி என,
மலர் அயன் உகந்த பயன் என,

அருவில் உறைகின்ற உயிர் என
அடியவர் உகந்த அமுது என
அரு மறைகள் ஒன்றி அடி தொழ
அருள் வரதர் நின்ற பெருமையே. 6–18

சித்து அசித்து என விரித்து உரைத்தன
அனைத்தும் அமைத்து உறையும் இறைவனார்,
சிறிய பெரிய உரு அடைய உடலம் என –
நடலம் இலது இலகும் நிலையினார்,

சித்திரத்து எழிலை ஒத்த பத்தரொடு
முத்தர் பித்தி எனும் உணர்வினார்,
சிதைவு இல் மறை நெறியில் எறி அ உரு முறைகள் –
முறிய சிறை அரிய நிறைவினார்,

கத்துவிக்க வல கத்து வித்தை வழி
கற்றவர்க்கு அசைவு இல் மறையினர்,
கபிலர் கண சரணர் சுகதர் சமணர் அரர்–
வழிகள் அழியும் அருள் மொழியினர்,

கத்து இலக்கிலும் அருக் குலத்திலும்
அசித்தில் ஒக்கும் ஒரு முதல்வனர்,
கரணம் இடு கடிய பதினெர் இருடிகமும்–
அடைய முடியும் அடி யிருடியார்,

ஒத்து அனைத்து உலகும் ஒற்றி ஒற்றி வரும்
இப் பவத்து இசையும் இசைவினர்,
உருவம் அருவம் எனும் உலகின் முடுகு இலதில்–
உவமைஇலதுஇலகு தலைவனர்,

உத்தமப் படி வகுத்த வித்தைகளில்
உத்தரிக்க உணர் குணவனர்,
உரிய கிரிசைகளில் அரியது ஒரு விரகு–
தெரிய விரையுமவர் பரிவினர்,

சத் அசத்து எனும் அனைத்து அணைத்த வினை–
தொத்து அறுக்க வல துணிவினர்,
சரியும் அளவு இல் உரியவரை அறிவு அரிய–
தமனி நெறி செருகு விரகினர்,

தத்துவத் திரள் உதைத்து உதைத்து அடைவு
தத்துவிக்குமவர் தலைவனர்,
தருகை உணருமவர் சரணம் அணுகல் விட –
அரிய அருள் வரதர் அடியமே. 6–19

திருமகள் மண்மகள் முதலா எல்லாத் –
தேவியரும் தன்னுடனே திகழ்ந்து நிற்கத்
தருமம் இரு மூன்று முதல் அனைத்தும் தோன்றத்
தன் அனைய சூரியர் தன் அடிக் கீழ் வாழ
அரு மறை சேர் அளவு இல்லா அவனியின் கண்
அரவணை மேல் வீற்றிருப்பால் அனைத்தும் காக்கும்
கருமணியைக் கரிகிரிமேற் கண்டேன் என்றன்
கடுவினைகள் அனைத்தும் நான் கண்டிலேனே. 6–20

பெடை இரண்டை ஓர் அனம் அடைந்து
பிரிந்திடா வகை பேசலாம்,
பெருகும் அருவிகள் அருகு மருவிய –
பெரிய மணி வரை பயிலலாம்,

பிடி இரண்டொடு களவம் ஒன்று
பிணைந்த பேரழகு ஓதலாம்,
பிரிவு இல் ஒளியொடு நிழலும் அருகுறும்
இரவி இலகுதல் பரவலாம்,

கொடி இரண்டொடு விடவி ஒன்று
குளிர்ந்தவாறு குலாவலாம்,
குறைவு இல் சுருதியும் நினைவும் இலகிய
தரும அரு நிலை என்னலாம்,

அடி இரண்டையும் அடையும் அன்பர்
அறிந்த பேரருளாளனர்
அணுகும் மலர்மகள் அவனி மகளொடு
கரடி கிரியினில் அவிர்தலே. 6–21

வேர் ஒப்பார், விண் முதலாம் காவுக்கு எல்லாம்;
விழி ஒப்பார், வேதம் எனும் கண் தனக்குக்;
கார் ஒப்பார், கருணை மழை பொழியும் நீரால்;
கடல் ஒப்பார், கண்டிடினும் காணுக் கூத்தால்;
நீர் ஒப்பார், நிலம் அளிக்கும் தன்மை தன்னல்;
நிலம் ஒப்பார், நெடும் பிழைகள் பொறுக்கும் நேரால்;
ஆர் ஒப்பார்? இவர் குணங்கள் அனைத்தும் கண்டால்;
அருளாளர் தாம் எனினும் தமக்கு ஒவ்வாரே. 6–22

எந் நிலமும் குரத்தால் குறி செய்த எழில் பரி கொண்டு
அன்னம் உயர்த்த செய்யோன் அன்று வேள்வி செய் வேதியின்மேல்
முன்னிலை ஆகிய மூர்த்தியன், நான்முக! மற்றும் உனக்கு
என்ன வரம் தருவோம் என்று நாதன் இயம்பினனே. 6–23

சென்று மலர் பறித்து எம் நாதன் சேவடிப் போது உகந்து
நன்று எனும் நீர் சுடர் நன்முகவாசம் இலை கொடுத்துக்
கன்னல் இலட்டுவத்தோடு அன்னம் சிடை கறி படைத்துப்
பின்னும் செவித்து அவன் பாதம் பணிமின்கள் என்றனனே. 6–24

ஆழி நிலை வினை கடிவான் அய மேதம் முடித்ததற்பின்
வேழமலை நாயகனுர் விடை கொடுக்க விண் ஏறி
நாழிகையில் வானவரை மாற்றியிடும் நான்முகன்தான்
ஊழியெலாம் அழியாத உயோகம் அடைந்திருந்தானே. 6–25

ஆதியுகத்து அயன் கண்டிட நின்ற அருள் வரதர்
காதல் உயர்ந்த களிற்றைத் திரேதையிற் காத்தளித்து
வாது உயர் தேவ குருவுக்கு இரங்கித் துவாபரத்தில்
சோதி அனந்தன் கலியில் தொழுது எழ நின்றனரே. 6–26

புண்டரீகம் உயிர்த்த புராணனுர்
பொய் இல் மா மக உத்தர வேதியில்
கொண்டலார் அருள் மாரி பொழிந்திடக்
கொண்டது ஓர் உயர் கூர் மதி அன்பினுல்
பண்டை நான் மறை மௌலி படிந்த யான்
பாரில் மெய் விரதக் கவி பாடினேன்;
தொண்டை மண்டல வேதியர் வாழவே!
தூய தென் மறை வல்லவர் வாழவே! 6–27

உய் விரதம் ஒன்று இன்றி அடைந்தார் உய்ய
ஒரு விரதம் தான் கொண்ட உயர்ந்த மாலைச்
செய் விரதம் ஒன்றுலும் தெளியகில்லாச்
சிந்தையினுல் திசை படைத்த திசை முகன்தான்
பொய் விரத நிலம் எல்லாம் போயே மீண்டு
புகல் இதுவே புண்ணியத்துக்கு என்று சேர்ந்த
மெய் விரத நன்னிலத்து மேன்மை ஏத்தி
வேதாந்த ஆசிரியன் விளங்கினுனே. 6–28

சீர் ஆரும் தூப்புல் திருவேங்கடமுடையான்
தாரார் அருளாளர் தாள் நயந்து—சீராக
மெய் விரத நன்னிலத்து மேன்மை இது மொழிந்தான்
கையிற் கனி போலக் கண்டு. 6–29

## பாடல் முதற்குறிப்பு அகராதி

(நூல் எண் – பாட்டு எண்)


KOVILOOR ANDAVAR
A. No. 15868
LIBRARY, KOVILOOR

